ol. XV. 1936—1937



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

பதினைந்தாம் சிலம்பு

இதழாசிரியர் கூட்டத்தலைவர்
மா. வே. நெல்லையப்ப பிள்ளை
யவர்கள், பி. ஏ.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்

தாது-ஈசுவரஸு

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly ...
Tinnevelly & M...

...ssive Printers, 2/17, Coral Merchant St., Madras.

# உள்ளுறை

[* இக் குறியிடப்பட்டவை இத் தொகுதியில் முடிவுபெறாது தொடர்வன.]


அழிசிகுடி (நற்றிணை 190)—திரு. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை, ... ௪௫௪

அளகிரி (கி. பி. 1673-1685)—வித்வான். கி. சாமிக்கண்ணு. ... ௨௮௦

அன்பும் மகவும் (பாட்டு)—A. சிதம்பரநாத செட்டியார், M. A. ... ௨௫௬

ஆலயத் திறப்பு (பாட்டு) திரு. T. இலக்குமண பிள்ளை, பி. ஏ. ... ௫௧௦, ௫௬௨, ௬௦௧

ஆனைந்து—துடிசைகிழார். அ. சிதம்பரனார். .... ௨௮௭, ௩௨௯, ௩௯௧, ௪௩௮

இந்தி மொழிப் பயிற்சி ஏற்புடைத்தாகுமா?—மறைமலையடிகள். ... ௩௬௧

இரகுநாத நாயக்கர்—வித்துவான். கி. சாமிக்கண்ணு. ... ௧௭௮

இரண்டாங்குறள் உரை—ஐயா. பா. வே. பொன்னுசாமி நாயக்கர். .. ௩௮௫

இளங்கோவும் பாவிகமும்—வித்வான். S. ஆறுமுக முதலியார், M. A., L. T. .... ௮௭, ௧௩௬, ௧௮௮

உலகப் பெருநூல் நிலையங்கள் ... ௪

உவில்லியம் மர்டாக்—N. குழந்தைவேலன், B. A. ... ௫௨௧

ஊடலும் கூடலும்—வித்வான். மா. இராச மாணிக்கம். ... ௨௩

ஊமைகளைப் பேசுவித்தல்—S. நடராஜ பிள்ளை, B. A., L. T. ... ௧௪௧

எந்நாட்டவர்க்கும் இறையே தென்னாடுடைய சிவன்—புதுவயல். அரு. சுப்பிரமணியம். ... ௮௪

ஐசக் நியூட்டன் சர்.—N. குழந்தைவேலன், B. A. .... ௪௬௧

கந்தழி—சேனாதிபதி. நடேச செட்டியார். ... ருநக

*கம்பநாடரும் உடன்பிறப்பு நோக்கத்தின் உண்மையும்—வித்வான். S. ஆறுமுக முதலியார், M. A. L. T. ... நஅஎ

கம்பரும் வள்ளுவரும்—திரு. சு. அருளம்பலம். ... நச, சகூஎ

கலித்தொகை உவமைக் காட்சிகள்—வித்வான். அ. மு. பரமசிவானந்தம். ... ருசகூ

கலீலியோ—N. குழந்தைவேலன், B. A. ... கஅ

கல்வி பயிற்றுமுறை நாட்டு மொழியிலா? ஆங்கிலத்திலா?—ஹானரபிள். ஸர். பிரோஸ் செத்னா. ... ககூச

கழி நெடிலடி இரட்டை ஆசிரிய விருத்தம்—காழி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை. ... சஅஅ

கிறீன் வைத்தியர்—சீனி. வேங்கடசாமி. ... உஎஅ

ஷை —வெள்ளவத்தை. குல சபாநாதன். ... ருஉச

குக்லியல்மோ மார்கோனி—N. குழந்தைவேலன், B. A. ... நசந

* குறுந்தொகை மூலமும் உரையும்—வித்வான் இரா. சிவ. சாம்பசிவன். ... உஅ, எ0, ககசு, கஎந, உஉச, உசுஅ, நகஎ, நஅ0, சநச, சகூ0, ருருச, ருகூஎ

குறுந்தொகை மொழிபெயர்ப்பு—T. B. கிருஷ்ணசாமி முதலியார், M. A., B. L.... ககூசு, ந0கூ, சஉஉ

சாமுவேல் மோர்ஸ் N. குழந்தைவேலன், B. A. ... உஅந

*சிவஞானபோதக் கருத்து—மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ. .... சந, கநக

சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பிற்கு உரை—திருமயிலை சண்முகம் பிள்ளை. ... நநஎ

செங்கமலதாஸ் நாயக்கர்—வித்வான் கி. சாமிக்கண்ணு. ... உஅக

செந்தமிழ்ச் செல்வி (பாட்டு)—நவாலியூர்
க. சோமசுந்தரப் புலவர். ... ௩௫௪

செந்தமிழ்ப் பெருமை—வேலனை கிழார்.
க. வேந்தனார். ... ௧௩

சேதுபதிகள் நாணயம்— ... ௫௮௨

சேவப்பநாயக்கர்—வித்வான் கி. சாமிக்கண்ணு... ௪௦௭

செய்திகளும் குறிப்புகளும்— ... ௧௦௩, ௧௫௬,
௨௧௩, ௨௪௩, ௨௬௬, ௩௪௮, ௪௧௨, ௪௬௭, ௫௧௦,
௫௬௨, ௬௦௬

டேனியல் மாக்மில்லன்—வ. சுப்பையாபிள்ளை .... ௫௬௨

தமிழருக்கு இந்திவேண்டுமோ?—சுவாமி சுத்
தானந்த பாரதியார். ... ௨௦௫

தமிழர்கடமை—வித்வான். பெ. கோவிந்தன்... ௧௦௭

தமிழும் இந்தியும்—ஈழத்துச் சிவாநந்த
அடிகளார். ... ௮

தமிழ் இலக்கணத் தத்துவக்கிடை—ஈப்போ.
தியாகராஜன், G. M. V. C. ... ௨௨௦, ௨௭௧,
௩௨௬

தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம்—
பா. வே. மாணிக்க நாய்க்கர்—க. ப. சந்
தோஷம். ... ௩௬, ௨௩௬.
௪௦௬, ௪௫௭, ௫௦௩, ௫௫௬

தமிழ்க்கலை சொல்லாக்கன் மகாநாடு தலை
மையுரை—சுவாமி விபுலாநந்தர். ... ௬௬, ௧௪௬

தமிழ்க்கலைச் சொல்லாக்கன் மகாநாடு வர
வேற்புரை—T. S. நடராச பிள்ளை,
B. A, B. L. ... ௬௪

தமிழ்த்தெய்வம் பராவல்—வித்வான் பெ. கோவிந்
தன். ... ௫

தமிழ்த்தெய்வ வணக்கம்— ,, ... ௩௦௬

தமிழ்நாட்டு மாணவர் கடமை—வித்வான்.
பெ. கோவிந்தன். ... ௬௩

தமிழ்மொழியில் சகர முதன்மொழி—துடிசை
கிழார். அ. சிதம்பரனார் .... ௬௫, ௧௨௧,
௧௬௭

தமிழ் யாப்பிலக்கண நூல்கள்—வித்துவான் மா. இராசமாணிக்கம் பிள்ளை. .... ௩௨0, ௩௭௪, ௪௩௨

தழுவுதொடரும் தழாத்தொடரும்—வித்வான். ஞா. தேவநேயப் பாவாணர். ... ௩௨

தனக்குவமை இல்லாதது தமிழ்மொழி—ஈழத்துச் சிவானந்த அடிகள் ... ௬0௧

தனித்தமிழ் வளர்ச்சி—பா. ரா. பரமசிவ முதலியார். ... ௪௪௭

தாமஸ் ஆல்வா எடிசன்—N. குழந்தை வேலன், B. A. ... ௩௬௬

திருஞான சம்பந்தர் தேவாரம்—M. V. நெல்லையப்ப பிள்ளை அவர்கள் B. A. ... ௧0௫, ௨௧௭, ௩௧௩, ௩௬௬, ௫௧௭

திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்—M. V. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், B. A. ... ௧௬௧, ௨௬௫, ௪௨௫, ௪௭௩, ௫௬௬

திருமயிலை வித்வான் சண்முகம் பிள்ளை— ... ௫அஅ

திருவள்ளுவர்—துடிசைகிழார். அ. சிதம்பரனார். ... ௫௩௫, ௭௨௫

திருவள்ளுவரும் பெண்களும்—பண்டிதை S. கிருஷ்ணவேணியம்மாள். ... ௨௪௭

திருவாசகம் உரை—M V. நெல்லையப்ப பிள்ளை, B. A. ... ௧, ௫௭

திருவாசகத்தில் விடுபட்ட ஒரு வாசகம்—ஒக்கூர் திரு. வீர. ராம. நா. சாத்தப்ப செட்டியார். .... ௩அ௪

தினமணி மதிப்புரைக்கு எதிர்ப்புரை—ஈழத்துச் சிவாநந்த அடிகள். ... ௨0அ

நுண்ணறிவு பெருக நூல் நிலையம் வேண்டும்—உ. அரு. அருணசலம் செட்டியார். ... ௪௯௪

நோபல் பரிசு—சி. சங்கரநாராயண பிள்ளை, B. A., B. L., ... ௨௧0

பழனியாண்டவர் (பாட்டு)—நவாலியூர். க. சோமசுந்தரப்புலவர் ... ௧௬௬

பனையும் பழந்தமிழ் நூல்களும் பிறவும்—
*பண்டிதர். கா. பொ. ரத்தினம்.* ... சருக, சஅச, ருசஉ.
பாடலியும் தமிழ்நூல்களும்—*வித்வான். மா. இராசமாணிக்கம், P. O. L.* ... சஎசு
பேதைமை (*பாட்டு*)—*வித்வான். பெ. கோவிந்தன்.* ... கசுரு
மதிப்புரை. ருரு, கOச, கசுO, உசுச,
முருகன்—M. C. *கலியாணசுந்தரம் பிள்ளை,* B. A. B. L. ... சசச
முற்கால நூல் நிலையங்கள்—*காழி. P. சுப்பையா.* ... கஅO
மோரியர் படையெடுப்பு—*வித்வான். மா. இராசமாணிக்கம். P. O. L* ... ருசசு
ரிச்சார்ட்டு ஆர்க்ரைட் (*சர்*)—N. *குழந்தைவேலன்,* B. A. ... எசு
வடசொல்லென மயங்கும் தொல்காப்பியத் தென்சொற்கள்—*பண்டித. ஞா. தேவநேயப்பாவணர்.* ... ககO
வள்ளல் நள்ளி—*வித்வான். இ. சிவகுருநாதன்* ... உநந
வள்ளுவர் வன்சொல்—*அ. சிதம்பரநாதஞ் செட்டியார்,* M. A. ... சுஉ
விசயநகர ஆட்சி—(கி. பி. 14431565) *வித்வான். கி. சாமிகண்ணு* ... சOசு
விஜயராகவ நாய்க்கர் ,, ... உநசு
வீரரும் வீரரைப்போற்றலும்—*குணஜனார்த்தனம்,* M. A., L. T. ... சஅ, கசசு, உOக.
வெண்பாவிற் புகழேந்தி—*பண்டிதர். கா. பொ. இரத்தினம்.* ... எச, கஉசு
வெல்ஸ் H. G.—*காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை,* B. A. ... ருக
ஜார்ஜ் ஸ்டீ பென்சன்—N. *குழந்தைவேலன்,* B. A ... கஅச
ஹம்ப்ரிடேவி சர்)— ,, ... உஉஅ

## உருவப் படங்கள்

---


திருமயிலைத் திருவள்ளுவர் கோயில்

கலீலியோ, ஆர்க்ரைட்

கலைச் சொல்லாக்கன் மாநாடு

T. S. நடராச பிள்ளை, பி. ஏ., பி. எல்.

பண்டிட் தி. பா. சிவராம பிள்ளை

வ. உ. சிதம்பரம் பிள்ளை

வித்வான் கோ. வடிவேலு செட்டியார்

குவீன் மேரி (பெரிய நீராவிக் கப்பல்)

ஆப்ரஹாம் லிங்கன்

வீரமா முனிவர்

சீகன்பால்கு ஐயர்

S. சோமசுந்தர பாரதியார், எம். ஏ., பி. எல்.

ஜான் டேவிசன் ராக்பெல்லர்

C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ.

இராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார்



மயிலைத் திருவள்ளுவர் கோயில்




சிலம்பு கடு] தாது—ஆவணி [பரல்-க

## திருவாசகம்

### கோயிற்றிருப்பதிகம்

சோதியாய்த் தோன்று முருவமே யருவா
மொருவனே சொல்லுதற் கரிய
வாதியே நடுவே யந்தமே பந்த
மறுக்கு மானந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் னிணையடி தந்தே.

பதவுரை:—

சோதியாய்த் தோன்றும் உருவமே (சிறப்புஇயலில்)—ஒளியாய் (அடியார்களுக்கு)த் தோன்றுகின்ற வடிவ முடையவனே

சொல்லுதற்கு அரிய அருவாம் ஒருவனே-அவ்வொளிவடிவமு மின்றி உருவமுடையவனென்று எவராலும் சொல்லமுடியாத ஒப்பற்ற தனிப்பொருளே

பந்தம் அறுக்கும் மா ஆநந்தம் கடலே-உயிர்களுடைய மலக்கட்டினை ஒழிக்கின்ற பேரின்பக்கடலே

ஆதியே நடுவே அந்தமே—(பொது இயலில்) உலகத்தைத் தோற்று தற்கு முதலாயும் காத்தற்கு நடுவாயும் அழித்தற்கு முடிவாயு மிருப்பவனே

தீதிலா நன்மைத் திருவருட்குன்றே (உயிர்களுக்குப் பேரின்ப மளித்தற்கண்) தீது கலவாத நலமே செய்தற்குக் காரணமா யமைந்துள்ள திருஅருள் மலையே

திருப்பெருந்துறை யுறை சிவனே—திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் சிவபெருமானே

வந்து நின் இணைஅடி தந்து—(திருப்பெருந்துறைக்கு நீ அந்தணன் வடிவில்) வந்து உன் இரண்டு திருவடிகளையும் (எனது தலைமேல்) வைத்து ஆண்டருளிய பின்

நீ போவதோர் வகை யாது எனக்கு அருளாய்—நீ என்னைத் தனியே விட்டுப் பிரிந்து போவதற்குரிய முறைமை என்ன என்று எனக்குச் சொல்லியருளாய்.

**விளக்கவுரை :—**

சோதியாய்த்தோன்றும் உருவமே—மெய்யுணர்வுடைய அடிகளுக்கு உருவம் ஒளிக்குள் சூக்கும சத்தியாய் மறைந்து ஒளி மாத்திரம் அவரது அகக் கண்ணுக்குத் தோன்றுதலால் சோதியா முருவமே என்னது 'சோதியாய்த் தோன்றும் உருவமே' என்றார்.

புறக் கண்ணல் உலக உருவங்களை நோக்குவார்க்கு அவ்வுருவங்கள் பூதாகாச ஒளியால் காணப்படுகின்றன. அகக்கண்ணல் நோக்கும் அடிகளுக்கு உலக உருவங்களெல்லாம் தூவெளியில் (ஞான ஆகாசத்தில்) சூக்குமசத்திகளாக அடங்கித் தோன்றுமே அன்றி உலக உருவங்களாகத் தோன்ரு. இக்கருத்தைத் திருமூலர் **திருமந்திரம்** 2681-வது பாட்டில்,

"ஒளியை யறியி லுருவு மொளியும்
ஒளியு முருவ மறியி லுருவாம்
ஒளியி லுருவ மறியி லொளியே
ஒளியு முருக வுடனிருந் தானே"

என்று கூறியருளினர்.

அருவாம் ஒருவனே—அருவம் என்ற சொல் இங்கே உருவமின்மையைக் குறிக்கிறது.

மேலே கூறப்பட்ட தூவெளி ஒளியும் (ஞானகாச ஒளியும்) அதற்கு உள்ளொளியாய் இறைவனேடு பிரியாமலிருக்கிற அருட்சத்திக்குள் அடங்கும் இயல்புடையது. அவ்வாறு தூவெளி ஒளியானது

அருட்சத்திக்குள்ளடங்கி யிருக்குங்கால் இறைவன் அருட்சத்தியோடு அத்துவிதமாய்க் கலந்து ஒருவனேயாய் இருத்தலால் 'அருவாம் ஒருவனே' என்றார். அருட்சத்தியோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கிற இறைவன் இன்ன உருவமுடையவன் என்று சொல்லப்படாதவன் ஆதலின் 'சொல்லுதற்கரிய அருவாம் ஒருவனே' என்றார். அருட்சத்தியாகிய பராசத்தி தூவெளி ஒளிக்கு உள்ளொளியாயிருக்கிறது என்பதைத் திருமூலர் திருமந்திரம் 2388-வது பாட்டில்,

"அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முள்ளொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றானெங் கள்கோவே"

என்று கூறியருளினர்.

பந்தம் அறுக்கும் மா ஆநந்தக்கடலே—தூவெளிஒளி தன்கண் அடங்கியிருக்கும் அருட்சத்தியி னொளியி லொடுங்கிய உயிர் கட்டு முழுவதும் ஒழிந்து இறைவனில் அடங்கிப் பேரின்ப முணர்தலால் 'பந்தமறுக்கும் மா ஆநந்தக்கடலே' என்றார். ஆநந்தமானது அளவிலடங்காத தாதலின் (Infinite Bliss) மா ஆநந்தக் கடலே' என்றார்.

ஆதியே நடுவே அந்தமே—ஆதி நடு அந்தம் என்பன இறைவன் உலகத்தைத் தோற்றுவித்துக் காத்து அழிக்கும் முத்தொழில்களையும் குறிக்கின்றன. முத்தொழில்களைச் செய்தல் இறைவனுடைய பொது இயல். "ஆதியனா யந்தம் நடுவாகி யல்லானே" என்று சிவபுராணம் அகவலிலும் 'முந்திய முதல் நடு இறுதியுமானாய்' என்று திருப்பள்ளி யெழுச்சி 8-வது பாட்டிலும் அடிகள் கூறியருளினமை காண்க.

தீதிலா நன்மைத் திருவருட்குன்றே—இஃது இறைவன் தீவிரதரசத்திநிபாதமடைந்த உயிர்களுக்குப் பேரின்பமளித்தலாகிய அநுக்கிரகத் தொழிலைக் குறிக்கிறது. இத்தொழிலை உயிர்களுக்குச் செய்தலில் அவன் மறக்கருணை சிறிதுமின்றி அறக்கருணையே உடையனாதலான் 'தீதிலா நன்மைத் திருஅருள்' என்றார். அவனது கருணை உயிர்களுக்கு அருள் செய்தலில் என்றும் மாறாது சலிப்பில்லாத நிலையை உடையது ஆதலின் 'திருஅருட் குன்றே' என்றார்.

இணை அடி தந்து—தந்தபின் என்பது தந்து எனத் திரிந்துநின்றது. ஏ-அசை.

நீ போவதோர் வகை யாது எனக்கருளாய்—வகை என்பது இங்கே முறைமையைக் குறிக்கிறது. அடிகள் தம்மை இறைவன் திருப்பெருந்துறைக்குவந்து ஆண்டருளியபின் தம்மை அடியார் கூட்டத்தோடு உடன்கூட்டிச் செல்லாது உலகிலிருக்கும்படி விட்டு விட்டுப் பிரிந்துபோனது என்ன முறைமை என்று அடிகள் இறைவனைக் கேட்கின்றார். தமது பிரிவாற்றாமையை அடிகள் வாழாப்பத்து முதலிய பல பதிகப் பாட்டுக்களிற் கூறியிருக்கின்றார். இந்தப்பாட்டிலும் அவர் தமது பிரிவாற்றாமையைக் கூறுகின்றார்.

'பார்பதமண்ட மனைத்துமாய்' என்ற முதற்குறிப்புப் பாட்டிற் போல இந்தப்பாட்டிலும் அடிகள் மூன்று ஒளிகளையுங் கூறுகின்றார். அடிகள் இறைவனைச் 'சோதியாய்த்தோன்றும்' உருவமே என்று விளித்தலால் சத்தின் ஒளியும், 'அருவாம் ஒருவனே' என்று விளித்தலால் சித்தின் ஒளியும், 'பந்தமறுக்குமானந்த மாகடலே' என்று விளித்தலால் ஆநந்தத்தின் ஒளியும் கூறப்பட்டன. இம்மூன்று ஒளிகளும் முறையே மலம் நீங்கிய ஒளிவிளங்கும் அறிவையும், பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கும் அன்பையும், பேரின்பமடைதலாகிய செயலையும் குறிக்கின்றன. இவை பேரின்ப அநுபோக இலக்கணங்களாம்.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## உலகப் பெருநூல்நிலையங்கள்

மாஸ்கோவிலுள்ள லெனின் அரசாங்க நூல் நிலையத்தில் உள்ள புத்தகங்களின் தொகை 6,000,000. லெனின்கிராட் பொதுநூல் நிலையத்திலுள்ள நூல்களின் தொகை 4,832,948. பாரியிலுள்ள பிப்ளியோதே நேஷனல் என்ற நூல் நிலையத்தில் 4,000,000 நூல்கள் உள. ஏறக்குறைய அதே தொகையான நூல்கள் பிரிட்டிஷ் மியூசிய நூல் நிலயத்திலுள்ளன. பிற சில நூல் நிலையங்களிலுள்ள நூல்கள் :—

| | |
|---|---|
| ஸ்டர்லிங் மெமோரியல் நூல் நிலையம், எல், | 3,500,000 |
| வாஷிங்டன் நூல் நிலையம் | 2,500,000 |
| பெர்லின் ஸ்டேட் நூல் நிலையம் | 2,300,000 |
| மூனிச் ஸ்டேட் நூல் நிலையம் | 1,670,000 |
| போடெலியன் நூல் நிலையம், ஆக்ஸ்போர்டு | 1,250,000 |
| யூனிவர்ஸிட்டி நூல் நிலையம், கேம்பிரிட்ஜ் | 1,250,000 |

# புதுக் கவிகள் - Original Poetry

## தமிழ்த் தெய்வம் பராவல்

[திரு. பெ. கோவிந்தன் அவர்கள்]

1. வழிவழித் தமது நாடுக ளாண்டு
வடபுலங் காத்திசை கொண்ட
செழியநற் சோழ சேரரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
மொழிமலர் புனைந்து திருவடி தொழுதும்
முன்புபோல் வன்மையும் அறிவும்
ஒழிவரும் உழைப்பும் வென்றியும் எமக்கீந்
துலகினை யாளுமா றருளாய்.

2. இல்லையென் றுரையா திரவலர் புலவர்க்
கீந்தவேள் பாரியே முதலாம்
நல்லிசை வள்ளல் எழுவரை யீன்று
நலம் பெறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
முல்லைநல் மலரால் திருவடி தொழுதும்
முத்தமிழ் வளர்ச்சிக்கு நெஞ்சக்
கல்லையு முருக்கிச் செல்வங்கள் நல்கிக்
களிக்குமா றுலகினுக் கருளாய்.

3. பண்டங்கள் கொண்டு காலினும் கலத்தும்
பலநிலம் புகுந்துவிற் றரும்பொன்
கொண்டிவண் மீண்ட வணிகரை யீன்று
குலவுறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
இண்டைகள் கொண்டு திருவடி தொழுதும்
எமதுபல் தொழிலையும் பெருக்கிப்
பண்டுபோல் என்றும் வாணிபம் புரிந்து
பலபொருள் கொள்ளுமா றருளாய்.

4. பட்டுநூல் மயிரால் பார்மிசை முதலில்
பலவுடை நெய்தலே முதலாம்
ஒட்பமார் தொழில்செய் தவர்களை யீன்று
உயர்வுறும் செந்தமிழ்ச் செல்வீ
வெட்சிமா மலரால் திருவடி தொழுதும்
வினைசெயுந் திறமையும் வினைக்கு
நுட்பமா ரறிவுஞ் செப்பமார் பயனும்
நூலறி வோடெமக் கருளாய்.

5. வள்ளுவன் னெடுதொல் காப்பியன் இளங்கோ
வண்டமிழ்ச் சாத்தனே முதலாம்
தெள்ளிய புலமைச் செல்வரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
கள்ளவிழ் மலரால் திருவடி தொழுதும்
கள்ளமி லுள்ளமாம் வயலில்
ஒள்ளிய கல்வி விதைவிதைத் துணர்வாம்
உயர்பயிர் விளைத்தெமை யுயர்த்தாய்.

6. நல்லிசைப் புலவ ராடவர் போன்று
நயமிகுந் தொடைபல தொடுத்த
மெல்லியல் மகளிர் பற்பல ரீன்று
மேம்படுஞ் செந்தமிழ்ச் செல்வீ
மல்லிகை மலரால் திருவடி தொழுதும்
மகளிர்க்கு மடமையா மிருளைக்
கல்வியாம் விளக்கா லகற்றிநூ லுணர்வுக்
கதிரினால் நூற்கநீ காட்டாய்.

7. பிள்ளைகள் பெற்று மகிழ்தலிற் பகைக்குப்
பிறக்கிடா திறந்தபிள் ளையைக்கண்
டுள்ளுவப் புற்ற தாயரை யீன்றிங்
குயர்வுறுஞ் செந்தமிழ்ச் செல்வீ

வெள்ளைநன் மலரால் திருவடி தொழுதும்
வீரத்தைப் பாலுட னூட்டிப்
பிள்ளையை வளர்க்கும் முறையினை யிந்நாட்
பெண்களுக் குளமகிழ்ந் தருளாய்

8. பிறப்பினுள் பொருளே கடவுளாம் மக்கட்
பிரிவினை ரொருகுல மென்னும்
அறத்திற முணர்ந்த அறிஞரை யீன்றிங்
கழகுறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
நிறத்துநீள் மலரால் திருவடி தொழுதும்
நினைப்புக்கும் வாழ்க்கைக்கும் ஒவ்வாத்
திறத்தினைப் போக்கி அகத்தினும் புறத்துஞ்
செம்மையோ டிருக்குமா றருளாய்.

9. ஆரியப் படையைப் பலகளத் தோட்டி
அடிபணித் தருளினால் விடுத்த
சீரிய தானை வேந்தரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
நாரிடு மலரால் திருவடி தொழுதும்
நற்றமிழ் நாட்டிற்கும் நினக்கும்
பேரிடர் புரியும் பூரியர் தம்மைப்
பிறக்கிட எமக்கருள் புரியாய்.

10. அறஞ்செயு முறையும் பொருள்செயு முறையும்
அன்பினா லின்புறு முறையும்
திறம்பட வுரைத்த தேவரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ
நறுஞ்சுனை மலரால் திருவடி தொழுதும்
நற்றமிழ் நாடும் அந்நாட்டின்
புறங்களுங் குறளின் நெறிவழி யொழுகிப்
பொய்யெலாம் போக்குமா றருளாய்,

# தமிழும் இந்தியும்

[ஈழத்துச் சிவாநந்த அடிகளார்]

இப்போது இரண்டு மூன்று ஆண்டுகளாக நந் தமிழகத்தில், வட நாட்டில் ஒரு சாராரால் பேசப்படும் 'இந்தி' என்னும் மொழியைப் பரப்புதல் செய்வான் சிலர் கொண்டுள்ள பயனற்ற கிளர்ச்சியைக் கண்டு அவர்தம் அறியாமைக்காகப் பெரிதும் வருந்தி, இதனடியிற் காணப்படும் என் உள்ளக்கிடக்கைகள் சிலவற்றை வெளியிட்டு நம் மக்கட்குப் பயன் படுத்த வேண்டுமென்ற பேரவாவானது என்னை அறியாமலே என் உள்ளத்தில் நுழைந்துவிட்டது. எனவே, இவ்வித கிளர்ச்சி செய்வதன் நோக்கம் யாதென வினவுபவர்கட்கு, அவர்கள், இப்போது பல்வேறு வகைகளிற் சிதறிக் கிடக்கும் நம் இந்திய மக்கள் அவரவர்களின் குறைபாடுகளை ஒருவருக்கொருவர் எடுத்தியம்பி, அக்குறைகளை நீக்கிக் கொள்ளுதற்கு இமயமலைக்கும் குமரி முனைக்கும் இடையே வாழும் மக்களுக்குப் பொதுவான ஒரு மொழி இல்லை என்றும்; அதனாலேயே மக்கள் கவலையும் வறுமையும் நிறைந்து, பிறருக்கு அடிமைகளாயும், தம் வாழ்க்கைக்கு இன்றியமையாத நலன்களைப் பெறமுடியாதவர்களாயும் இருக்கிறார்களென்றும் இன்னும் பொருத்தமற்றதும் பொருளற்றதுமான பலவகை மேற்கோள்களைக் காட்டியும் விடை அளிக்கின்றார்கள்.

இனி, இவர்கள் கூறுவதுபோல இந்தியையே நாவலந்தீவிற்குப் பொதுமொழியாக ஏற்படுத்தி அதைக் கற்று அதன்வழித்தாய் மக்கள் தம் குறைகளெல்லாம் நீங்கப்பெற்று நன்மைகள் எய்தப் பெறலாம் என்று கருதுவதானது "மலையைக் கல்லினால் எலியைப் பிடிக்கலாம்" என்று நினைப்பதை ஒத்திருக்கின்றது. நிற்க.

பொதுவாக, மக்கள் தங்களுக்கு ஏற்பட்ட குறைகளைத் தங்களை ஆளும் அரசரிடமே முறையிட்டு அக்குறைகள் நீங்கப்பெற்றுத் தாம் விரும்பிய நலன்களை அடைவதென்று பண்டைய சரித்திரங்களால் அறியக்கிடக்கின்றது. அரசரை நேரிற் கண்டு தம் குறைகளைச் சொல்லமுடியாதவர்கள் அரசரின் அமைச்சர் வழியாலும், அதுவும்முடியாதவர்கள் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டு அரசரால் அதிகாரம் பெற்ற தலைவர்களாலுமே தங்கள் தங்கள் குறைகளை நீக்கிக்கொள்ள இயலுமென்பதே பொருந்தும்.

அங்ஙனமன்றி, இப்போது இவர்கள் கூறுவதுபோல மக்களெல்லாரும் ஒரு பொதுமொழியைக் கற்று அதன்வழித்தாய் நலமடையப் பெறலாமென்பதும், மக்கள் ஒருவருக்கொருவர் தங்கள் குறைகளைச் சொல்லுவதினால் அவர்கள்தம் குறைபாடுகள் நீங்கிவிடுமென்பதும் எவ்விடத்தும் எக்காலத்தும் நாம் கண்டுங் கேட்டுமில்லாதனவாம்,

எடுத்துக்காட்டாக, தமிழ்நாட்டில் கருவூரில் உள்ள குடிகள் தங்களுக்கிருக்கும் குறைகளைக் கருவூரிலுள்ள தலைவரிடம் முறையிட்டு நீக்கிக்கொள்ள முடியுமே யொழிய, கருவூரில் உள்ளவர்கள் வடநாட்டில் லாகூரிலுள்ள தலைவரிடம் தங்கள் குறைகளைச்சொல்லி நீக்கிக்கொள்ள முடியாதென்பது எப்பேர்ப்பட்டவர்களுக்கும் நன்கு விளங்குவ தொன்றன்றோ! அன்றியும், கருவூரிலுள்ளவர்கள் லாகூரிலுள்ள தலைவரிடஞ்சென்று முறையிட்டால், அவர் "நீங்கள் உங்கள் குறைகளை உங்கள் ஊரிலுள்ள தலைவரிடமே சொல்லி நீக்கிக்கொள்ளுங்கள்" என்று கூறுவரே அல்லாமல் தாம் அந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்ளமாட்டார் என்பதும், அப்படி அவர் அப்பொறுப்பை ஏற்று நடத்துவதென்று ஒப்புக்கொண்டால், உடனே நாட்டின் தலைவர்களுக்குள் பிளவுகள் ஏற்பட்டுப் பெரிய சச்சரவு உண்டாகுமென்பதும் ஒருதலை.

ஆனால், இப்பொழுது நம்மை ஆளும் அரசினர் பண்டைய அரசர் போன்று குடிகள் முறையிடும் குறைபாடுகட்குச் செவி சாய்க்காது இருக்கின்றார்களே என்று சொல்லுவீர்களானால், அங்ஙனம் அவர்கள் இருப்பதற்குக் காரணம் நம் நாட்டுக்கு நலம் பல செய்பவர்களென்று நம்பி நம்மவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களின் கவனக் குறைவும், ஆற்றலின்மையும், தன்னலப் பிரியமுமே யொழிய, அரசர்பால் குற்றம் சுமத்துவதும் அவர் தம்மைக் குறைகூறுவதும் தவறாகும்.

நான் இங்ஙனம் கூறுவதினின்றும் தமிழ் மக்கள் இந்தி முதலிய அயல்மொழிகளைக் கற்கக் கூடாதெனச் சொல்லுவதாகப் பொருள்படுத்தி விடக்கூடாது. நம் மக்கள் தாய்மொழியாகிய தமிழைத் திருந்திய அறிவு விளங்கக் கற்றபின்பே வேண்டுமானால் பிறமொழிகளையுங் கற்கலாமென்பதே எனது நோக்கம்.

நந் தமிழ் மக்களுள்ளும் தாய் மொழியைப் படித்தவர்கள் நூற்றுக்கு மூன்று நாலு பேர்தான் காணப்படுகிறார்கள்; ஆகையால் முதலில் தாய்மொழியைப் படித்து அதில் திருந்திய அறிவை அடைந்தபின் இந்தியைப் படியுங்கள் என்ற கிளர்ச்சியை நம்மவர்கள் கடைப்பிடிப்பார்களானால், இப்போது ஏற்பட்டிருக்கும் நாட்டு வறுமை நகர்ந்து பலதிறப்பட்ட நலன்களை நம் மக்கள் பெற்று இனிது வாழ்தல் முடியுமென்பதும் ஒருதலை.

எனவே, என் உள்ளத்தில் நிகழ்ந்த அடியிற் காணப்படும் ஐயப்பாடுகளுக்குக் கற்று அறிவிற் சிறந்தோர் தக்க சான்றுகளுடன் தெளிவான விடைகள் எழுதி உதவுவதோடு, நான் இக்கட்டுரையில் எழுதியவற்றின் பொருட்களை நன்கு ஆராய்ந்து, நம் நாடு முன்னேற்ற மடையக் கூடிய முறையில் தக்க நெறிகளைக் கையாண்டு வருவார்களானால் அவை எல்லார்க்கும் பெரும் பயன் தருவதாகும்.

1. தாய்மொழியைக் கல்லாது வேறு அயல் மொழிகளைக் கற்று அவற்றால் திருந்திய அறிவைப்பெற முடியுமா?

2. தமிழக மருங்கினருள் நூற்றுக்கு எத்தனைபேர் தம் தாய்மொழியைக் கற்றிருக்கின்றனர்? அவருள்ளும் செவ்விதான முறை

யில் தமிழைக் கற்றுத் திருந்திய அறிவைப் பெற்றுள்ளவர்கள் ஆயிரத் துக்கு எத்தனை பேர் இருக்கின்றனர்? அங்ஙனம் ஒழுங்கான கல்வி படித்தவர்கள் நூறுயிரவரில் ஒருவர்தான் காணப்படுவர் என்றால், இப்போது இந்தி முதலிய அயல் மொழிகளைக் கட்டாயம் கற்கத்தான் வேண்டுமென்று கூச்சலிடுபவர்களது வெற்றாரவாரத்துக்கு அறிவாப் புக் கொடுத்து அவ்வயல்மொழிகளின் மணம் நந் தமிழ்மக்கள் வாழும் இடங்களில் வீசப்பெறாது தொலைவில் அகலும்படி செய்ய வல்ல போதிய தமிழறிஞர் ஆங்காங்கு அவ்வப்பொழுது காணப் பெறாமையே என்றும், அங்ஙனம் காணப்படும் ஒரு சில அறிஞர்க்கும் தக்க உதவி அளித்து ஆதரிப்போர் இல்லாமையே என்றும் நான் சொல்லுவதைத் தடுப்பவர்களும் உண்டா நந் தமிழகத்தில்?

3. நந் தாய்மொழியாகிய தமிழைப் படித்து அதன் வழியாகப் பெறமுடியாதது யாதாயினும் உளதா? அங்ஙனம் உளதாயின் அவை யாவை?

4. தமிழகத்தார் வடநாட்டவருள்ளும் ஒரு சிலராற் பேசப்படும் "இந்தி" என்னும் அயல்மொழியை எதன்பொருட்டுக் கற்க வேண்டும்?

5. பழத்தைவிட்டுப் பச்சைக் காயைத் தின்பது போல, நாவி னாற் சொல்லுதற்கு எளிதாயும், செவியினாற் கேட்பதற்கு இனிதாயும், மனத்தினால் நுகர்வதற்கு மகிழ்ச்சியைத் தருவதாயும் உள்ள தீஞ்சு வைத் தமிழை விட்டு, நாவினாற் சொல்லுதற்கு வலிதாயும், செவியி னாற் கேட்டற்கு உரப்புதல், கனைத்தல் முதலிய வல்லோசைகளை உடைத்தா யிருத்தலால் துன்பமாயும், மனத்தினால் நுகர்வதற்கு எவ்வித நலனையும் தரவல்லதல்ல வாகையால் வெறுப்பாயும் இருக் கின்ற இந்தியைக் கல்லாததினால் நந் தமிழ்மக்கள் நடாத்தும் இம்மை மறுமை வீடுகட்குரிய நெறிகட்கு இன்றியமையாத நலனைத் தரவல்ல யாதாயினும் ஒன்று "நான் எனது இன்ப நலத்தை அவர் கள் மாட்டுச் செலுத்த முடியாத நிலைமையில் இருக்கின்றேன்" என்று முறையிடுகின்றதென இப்போது இந்தியைக் கட்டாயங் கற்கத்தான் வேண்டுமென்று கூறுபவர்கள் தங்களின் நுணுகிய ஆராய்ச்சியால் அறிந்தார்களா?

6. அவர்கள்தம் ஆராய்ச்சி அங்ஙனமாய் அவர்களது அறிவில், "இந்தி" கட்டாயம் கற்கவேண்டியதென எழுந்த நோக்கமாகிய முளையானது தான் வளர்ந்தோங்குவதற்குத் தடையாக, நிலைபெற்ற தமிழ் என்று சொல்லப்படும் பெரிய கற்பக தருவானது நந் தமிழக முழுவதும் சீரிய இன்பத்தைத் தரவல்ல தனது குளிர்ந்த நிழலைப் பரப்பி நிற்பதால், அது ("இந்தி" கட்டாயம் கற்கவேண்டிய தொன்றென எழுந்த நோக்கமாகிய முளை) வாடி வதங்கித் தனது பயனை அளிக்க இயலாது போவதோடு, இவ்வித ஆராய்ச்சிக்காரரும் நிலைபெற்ற தமிழ்த் தாயின் புதல்வரால் "ஏ! ஏ! இவர்கள் அறிவிருந் தவாறென்னை!" என்று எள்ளி நகைக்கப் படுவார்களென்றும் கூறுவ தில் என்ன குற்றம் இருக்கிறது?

7. தமிழிலே பிறந்து தமிழிலே வளர்ந்து தமிழைக் கல்லாது இந்தி முதலிய அயல் மொழிகளைப் படித்து அவற்றிலே தம் வாழ்க்கையை நடாத்தி அதன்வழித்தாய் முன்னேற்ற மடைந்த தமிழ் மக்கள் யாராயினும் உண்டாயிருந்தால், அவர்கள் யார்? எக்காலத்தில் எவ்வித முன்னேற்றத்தை அடைந்தார்களென்பதைத் தக்க சான்றுகளுடன் விளக்கிக்காட்டுக.

8. அறிவாற்றலிற் சிறந்து விளங்கிய வடநாட்டவருள் ஒருவரான சுவாமி விவேகானந்தா அவர்களும் தாம் அமெரிக்காவில் இருந்த காலத்தில், அங்குள்ளவர்க்கு நாவலந் தீவின் பெருமையை எடுத்துக்காட்டுதற் பொருட்டு அவர் ஆராயவேண்டியிருந்த நூல்கள் பலவற்றுள் உபநிடதமும் ஒன்றாயிருந்ததால், அவ்வுபநிடதப் பொருள்களை எல்லாம் ஒருங்கமைத்து ஒரே புத்தகமாக அச்சிடப் பெற்றிருப்பது தமிழ்மொழி ஒன்றிலேதா னென்றும், அப்படிப்பட்ட புத்தகமும் மைசூர் அரச அவைப் புத்தக நிலையத்தில் இருக்கின்ற தென்பதைத் தாம் முன் மைசூருக்குச் சென்றிருந்த பொழுது பார்த்துள்ள நினைவு தோன்றலும், உடனே அப்புத்தகத்தைத் தமக்கு அனுப்பி உதவுமாறு அரசருக்கு ஒரு கடிதம் எழுதிப் பெற்றதோடு, சென்னையின்கண் உள்ள சில தமிழறிஞர்கட்குத் தமிழ் எழுத்துக்களின் ஒலி வடிவு முதலியனவற்றை எழுதி அனுப்புமாறு எழுதிப் பெற்றும், கற்றற்கு மிக எளிதாயுள்ள இனிய தமிழை விரைவில் கற்று, அதன் வழித்தாய் நம் நாட்டைப்பற்றியும், நம் மக்களின் சீரிய ஒழுக்கங்களைப் பற்றியும் செவ்வனே சொல்லி அவர்கள் எல்லாரையும் உவகைக் கடலுள் ஆழ்த்தின ரென்றும், அவருடைய சரித்திரத்திலேயே வெள்ளிடை மலைபோலத் தெள்ளிதில் அறியக் கிடக்கின்ற தென்பதை இப்போது இந்தியைப் படிக்கத்தான்வேண்டுமென்று வாய்ப்பறை அறைபவர்கள் என் தெரியாது போய் விட்டார்கள்?

9. தமிழ்த் தாயின் அருமந்த குழந்தைகளாகிய திருக்குறள், நாலடியார் போன்ற ஒரு நூலாவது வேறு எந்த நாட்டின் எந்தமொழியிலாவது இருக்கின்றதெனச் சொல்ல யாராவது முன்வருவார்களா? அல்லது திருக்குறள் மொழிபெயர்க்கப்பட் டிருப்பதுபோல வேறு எந்த மொழியின் நூலாவது பல வேறு நாட்டின் பல்வேறு மொழிகளாற் சிறப்பிக்கப் பெற்றும், எல்லாரும் தத்தம் வேதம் என்று சொல்லும் மாண்பு வாய்ப்பப் பொருள் செறியப் பெற்றும் அங்ஙனம் மொழி பெயர்க்கப்பட்டுச் சிறப்புற்று விளங்குகின்றதா?

10. "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டு உமக்கோ மற்றச் சமயமெந்தமாம்" என்று எமது கண்ணுடைய வள்ளல் கூறியதற்கேற்ப அறம், பொருள், இன்பத்தைப் பயப்பதாயும், வீடு பேற்றினைத் தரவல்லதுமாகிய நன்னெறிகளைத் திருக்குறளாகிய தமிழ் மறையில் காண்பதுபோல வேறு எந்த மொழியின் எந்த நூலிலாவது காணுதல் இயலாதென்பதை மறுத்துச்சொல்ல எவரேனும் முன்வருவார்களா?

11. "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு" என்று பாரதியாரும்; "Sage Tiruvalluvar should not be styled the unknown sage of Mylapore, for he has long been known far beyond the borders of his Mother Country"—Prof: M. WINTERNITZ. அதாவது, "திருவள்ளுவ முனிவரை மைலாப்பூரைச் சேர்ந்த யாரோ ஒருவர் என்று கூறுதல் தகாது; அவர் புகழ் அவர் பிறந்த நாட்டைக்கடந்து தொலைவிலுள்ள வெளிநாடுகளில் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே பரவிவிட்டது" என்று பேராசிரியரான வின்டர்னிட்ஸ் துரை அவர்களும்; "To those, who labour for the salvation of the Tamil people, the Kural must be a work of peculiar nay, intense interest"—Rev. Dr. J. LAZARUS. அதாவது, "தமிழ் மக்களின் விடுதலைக்காகப் பாடு படுவோர்க்குத் திருக்குறள் தனிப்பட்ட பேருதவி நல்குவதாகும்" என்று ரெவரண்டு, டாக்டர் ஜே. லாசரஸ் அவர்களும் இன்னும் பல மேனாட்டு அறிஞர்களும் புகழ்ந்து போற்றியதுபோல வேறு எம்மொழியின் நூலாவது போற்றப்பட்டதுண்டா?

திருக்குறளின் பெருமையை எடுத்தியம்ப வேண்டின், அதற்கென ஒரு தனி நூல் எழுதினாலன்றி இயலாது.

இன்னும், நந் தமிழின் பெருமையைப் பற்றி, இராமபிரான் கிட்கிந்தையிலிருந்து இலங்கைக்கு அனுமாரைத் தூது போக்கிய காலத்தில், அனுமாரைப் பார்த்து "நீ போகவிருக்கும் வழியிலுள்ள தமிழ் நாட்டின் ஊடே செல்ல வேண்டா மென்றும், சென்றால் அவ்விடத்தவர்கள் பேசும், படிக்கும், பாடும் இனிய தமிழ்ச் சுவை உன் செவியிற் பட்டால் நீ அதில் இலயப்பட்டு எனது வேலையை மறந்து விடுவா யென்றும், தமிழ் ஓசை உன் செவியிற் படாத தொலைவிற் போக வேண்டும்" என்றும் தமிழின் சிறப்பை இராமபிரான் எடுத்துச் சொன்னது போல வேறு யார் சொன்னார்கள்?

எனவே, இங்ஙனம் அளவிட்டுச் சொல்ல இயலாத தமிழ்க் கடலின் தீஞ்சுவை பொருந்திய தெவிட்டாத அமிழ்தத்தை எனது சிற்றறிவாகிய நாழி கொண்டு எத்துணை முகத்தல் இயலுமோ அத்துணை அளவில் முகந்து கூறினேன். ஆகையால் இப்போது இந்தியைக் கற்கத்தான் வேண்டுமென்று சொல்லுபவர்களின் பயனற்ற கூற்றுக்கு ஈடுபட்டிருக்கும் நந்தமிழ் மக்கள் இனிமேலாவது "தக்கன் சாபத்திற்கு அஞ்சிய வான்மதி சிவபெருமானிடம் அடைக்கலம் புகுந்ததுபோல"ப் பல மொழிகளாலும் விழுங்கப்பட்டு ஒருசிறிது எஞ்சி நிற்கும் தமிழானது திருநெல்வேலிச் **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடமும், தமிழ்மொழிப் பாதுகாவலராகிய திருவாளர் மறைமலை அடிகள்** அவரிடமும், இன்னும் சில தமிழறிஞர்களிடமும் அடைக்கலம் புகுந்துநிற்கின்ற தென்பதை உணர்ந்து, தமிழ்நாட்டிற்கு உள்ளும் புறம்பும் ஒத்த உரிமையுடையதாய் இருக்கின்ற தமிழ் மொழியை முன்னேற்றத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்று "ஒருவன் தான் இச்சித்துள்ள பொருளைப் பெறுவதில் எத்துணைத் தாழ்வு வந்தபோதிலும் அவற்றைப் பொறுத்துத் தான் இச்சித்த பொருளையே பெறு

தல் போன்று" நான் எத்துணைத் தாழ்மையுடன் கேட்க முடியுமோ அத்துணைத் தாழ்மையுடனும் தமிழுக்கு உரிமைபூண்ட தக்கார் எல்லாரையும் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

"கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந்தமிழ் ஏனை
மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப் படக் கிடந்ததாய் எண்ணவும் படுமோ."

—(திருவிளையாடற் புராணம்)

தமிழ்!　　தமிழ்!!　　தமிழ்!!!

---

# செந்தமிழ்ப் பெருமை

[வேலணைகிழார் க. வேந்தனார்]

பன்னூற்றாண்டுகளாக நிலைத்துப் பெரும்புகழ் பரப்பி வரும், நம் செந்தமிழ் மொழியானது இடைப்பட்டகாலத்தில் ஆரியமொழிக் கலப்பினாற் றனது தூயதன்மை யிழந்து மாசு படிந்த மாணிக்கம் போல, வளங்குன்றுவதாயிற்று. இதனை அஞ்ஞான்று, தமிழ்மொழிக்கெனத் தொண்டு பூண்டு, உழைத்து வந்த பெருந்தகையாளர்களில், ஒருவராதலுணர்ந்திலர்; அவர்களுட் பெரும்பாலர், ஆரியமொழிக் கலப்பினாற் றமிழ்மொழி பெரிதுஞ் செம்மை பெறுமென வெண்ணினர். இங்ஙனம், எண்ணியதோ டமையாது, இவ்வெண்ணத்தின் முதிர்ச்சிப்பாட்டினால், தம்மாற் றமிழ் மொழியில் எழுதப் பட்ட நூல்களினும், உரைகளினும், ஆரிய மொழியையும் அம்மொழியாளர்களின் கொள்கைகளையும் மிக மிகக் கலந் தெழுதி வந்தனர். இவற்றினிற் கெடுத்துக்காட்டாக மணிப் பிரவாள வுரை நடையினையும், ஆசிரியர் 'பரிமேலழகியார்' தமிழ்ப்பெரும் மறையாகிய திருக்குறளினிற் கெழுதிய வுரை யினையும் நோக்குக.

இனி, இங்ஙனம் ஆரிய மொழியினையும் அம்மொழியாளரின் கொள்கைகளையும் தமிழ்மொழிக்கண் கலந்தெழுதி மாசுறுத்தினதுமன்றித் தமிழ்மொழியின் கடவுட்டன்மையினையும் மொழியாக்க நுண்மையினையும், தனிப் பெருந்தூய்மையினையும், அதன்கண்ணுள பொருணலந்துறுமிய தொன்னூல்களின் செவ்வியினையுஞ் சிறிதும் ஆயாது, தமது ஆரியமொழிப்

பற்றினால் தமிழ்மொழியை மிகவும் வெறுத்திகழுவாராயினர்.

இங்ஙனந்தமிழ் மொழியை வெறுத்திகழ்ந்தவர்களுட் டலையாயவர் திருவாவடுதுறை யாதீனத்துச் சுவாமி நாத தேசிகரே யென்பதைத் தமிழ்ப் பேரறிஞர்கள் நன்குணர்வார். இச்சுவாமிநாத தேசிகர், தாமாக்கிய இலக்கணக்கொத்து எனும் நூலின்கண்,

> "அன்றியுந் தமிழ் நூற்களவிலை யவற்றுள்
> ஒன்றே யாயினுந் தனித் தமிழுண்டோ
> அன்றியு மைந்தெழுத்தா லொரு பாடையென்
> றறையவே நாணுவ ரறிவுடை யோரே
> யாகையால் யானு மதுவே யறிக
> வடமொழி தமிழ்மொழி எனுமிரு மொழியினும்
> இலக்கண மொன்றே யென்றே யெண்ணுக."

எனக் கூறியிருத்தல் தமிழ்மொழிப்புலத்துறை முற்றிய நலத்தகை யாளர்கட்குப் பெரிதும் நகைவிளைப்ப தொன்று கும். ஆரியர் கூறுந் தமிழை நகைச்சுவைக் கெடுத்துக்காட்டிய பேராசிரியர், தேசிகரவர்களின் காலத்திற்குப் பிந்தின வராகவிருப்பின், வடமொழிப்பற்றினால், தமிழ்மொழியை யிகழ்தல் எனவெடுத்துக்காட்டியிருப்பா ரென்பதில் எட்டுணை யுமையமின்று. என்னை? தேசிகரவர்களின் கூற்று நகைச் சுவைக் கொருகொள்கலமா யிருத்தலினென்பது மிகவுஞ் சிறந்ததொரு மாணிக்கக்கல்லை யொளியற்ற கருங்கல்லென வொருவன் கூறியிகழின் யாருக்குத்தான் நகைவராது? இது போலவே தேசிகர் அவர்களும் "அன்றியுந்தமிழ்நூற்களவிலை யவற்றுள் ஒன்றேயாயினுந் தனித்தமிழ் உண்டோ?" எனக் கேள்வி யெழுப்புகின்றார். இக்கேள்விக்குத் தமிழ் அன்பர் களின், விழுமிய முயற்சியினால் பழந்தமிழ் நூல்கள் பல வெளி வந்துள்ள இஞ்ஞான்றில் விடைகூறல் வேண்டுவதின்று. கலித் தொகை முதலிய பழந்தமிழ் நூற்பயிற்சி சிறிதேயுடையார்க் கும், தமிழ்மொழியின்கண் வடமொழி கலவாதநூல் ஒன்று மிலையென்று, நாக்கூசாதுரைத்த தேசிகர் அவர்களின், வெற் றுரைப்போக்கு நன்கு புலனாகும். அன்றியும் இஞ்ஞான் றைத் தமிழ்ப் பேரறிஞர்களும், மொழிநூலறிஞர்களும் ஆராய்ந்து எழுதுந் தமிழ்க்கட்டுரைகளானும், நூல்களானும் தமிழ்மொழி தனித்தியங்கும் பெருந்தகைப் பாடுடையதென் பது சிறுமகார்க்கும் நன்கு தெரிந்த தொன்றாகும்.

இன்னுமவர் "ஐந்தெழுத்தாலொரு பாடையென்றறை யவே நாணுவரறிவுடையோரே" எனக்கூறி ஆசிரியர் தொல் காப்பியனார் நக்கீரனார் முதலிய கடவுட்டன்மை விரவிய பெரியார்க்கும் அறியாமை யேற்றுகின்றார். என்னை?

"வடவேங்கடந் தென்குமரி யாயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்" தெனவும்,
"செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு"

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் நுதலி நூல்செய்தமை, பனம்பாரனார் பகர்ந்தமையின், அறிஞர்க்கு நாணுத் தருவ தொன்றாகும் எனத் தேசிகர் அவர்கள் கூறிய கூற்றுப் பொருந்தாக் கூற்றாமென அறிக. "தமிழ் கூறு நல்லுலக மெனவும்," "செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு" என வுங் கூறியதிலிருந்து தமிழென வோர்மொழி யுண்டெனவும், அஃது இன்ன எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பிடை வழங்கிற் றென்றும், ஆசிரியர் தொல்காப்பியனார் இலக்கணஞ் செய் துள்ளார். தேசிகரவர்கள், "ஐந்தெழுத்தால் ஒருபாடை யென்று அறையவே நாணுவ ரறிவுடையோரே" எனக்கூறின மையால், தமிழ்மொழியெனவேறு கண்டு, இலக்கணஞ்செய்த தொல்காப்பியனாருக்கும் அவரின் முன்னூலாருக்கும் அறி யாமையேற்றுகின்றா ரெனக் கூறன்மிகையாகாது. இனி இங்ங னமே நக்கீரனாரும் இறையனார் களவியலுரையில் தமிழ்மொழி யென வொன்று கொண்டு அதன் சிறப்புக்களை நன்கெடுத் தியம்பி யிருத்தலின், அவருக்கு மிவரறியாமை யேற்றுகின்றா ரென்றல் மிகையாகாது; சுருங்கக் கூறின், தமிழ்மொழி யைப் பண்டிருந்தே போற்றிவந்த பெருந்தகையாள ரெல் லார்க்கும் இவர் அறியாமை யேற்றுகின்றாரென்றே கூறலாம்.

இனி வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் பொதுவாயுள வெழுத்துக்கள், வடமொழிக்கே யுரியவாமாறு எங்ஙனம்? ஐந்தெழுத்துக்கள், தமிழ்மொழிக்கே சிறப்பாக வுடைத் தெனக் கண்டது வடமொழிக்கண் அவ்வெழுத்துக்கள் இல் லாமையினன்றே! அங்ஙனமிருப்ப, இவர், தமிழ்மொழிக்கண் ஐந்தெழுத்தே யுடைத்தெனக் கூறல் எங்ஙனம் பொருந்தும்? ஆரியமொழியாளர்கள் தங்கள் மொழியை வரிவடிவில் அமை யாது எழுதாமறையெனப் போற்றிவந்தனரென்றும், தமிழ் மக்கள் பண்டிருந்தே தமக்கென வரிவடிவினை யுடையாரென் றும், தமிழ்மக்கள் தம்மொழிக்கு வரிவடிவு கண்ட பலவாண்டு கட்குப் பின்பே வடமொழியாளர்கள் வரிவடிவு கொண் டாரென்றும் ஆராச்சியாளர், தக்க சான்றுகளுடன் நிறுவியிருக்கின்றனர். அவையெல்லாம் மீண்டுரைப்பின் விரியுமென்று விடுக்கின்றேன். எனவே இக்கூற்றினால், தேசிகர் அவர்களின், எழுத்தெண்முறைகள் யாவும், ஆராய்ச்சியில்லாத வெற்றுரையாதல் காண்க.

இனித் தேசிகரவர்கள், "வடமொழி தமிழ்மொழி யெனு மிருமொழியினும், இலக்கணமொன்றே யென்றே யெண்ணுக"

எனக்கூறியிருத்தலை யெண்ணுந்தோறும், எண்ணுந்தோறும், உண்மைத் தமிழன்பர்களாயுள்ள எவருங் கண்ணீர்வடியாது விடார்கள். என்னை? தொன்மையும், பொருணலச் செவ்வியும், கடவுட்டன்மையும் மொழியாக்க நுண்மையும் மிகமிகப் பொதுளித் தன்னுடன் ஒத்த பழமையுடையனவாக் கருதப் பட்ட ஆரியம், இலத்தீன், கிரீக் முதலிய மொழிகளெல்லாம், பேச்சுவழக்கில் நின்று இறந்துபடவும், தான் இன்றும் பல கோடி மக்களினுற் பேசப்பட்டும், பிற எம்மொழிகட்குமில் லாத பொருளிலக்கணமும், இயற்கையை ஓவியமெடுத்தாற் போல்உணர்ச்சி வாய்ந்த புலவர் பெருமக்களாற் பாடப்பெற்ற இலக்கிய நூல்களையும் கடவுளுண்மைகளைக் கூறும் நூல்களை யும், கடவுளரும் விழையும் கனிந்த வினிமையும் பொருந்தி, என்றும் இளமையுடன் நிலைபெற்றுள இனிய தமிழ் மொழிக் கும், பேச்சுவழக்கிறந்து பொருணலச்செவ்வியற்ற வட மொழிக்கும், இலக்கண மொன்றென எட்டுணையும், அஞ் சாது கூறிப்போந்த தேசிகர் அவர்களின் துணிவே துணிவு!

இனி, இங்ஙனம் மாட்சிமை மிகமிகப் பொதுளிய செந் தமிழ் மொழியையிகழ்ந்து தேசிகர் அவர்கள் கூறியது பொருத் திருவாவடுதுறை யாதீனத்துச் சிவஞான யோகிகள் மிகவும் வருந்தித் தேசிகரவர்கள், தம்மாதீனத்துப் புலவ ரென்பதையு மெண்ணது நடுநின்ருய்ந்து, தமிழ்மொழிக் கும் வடமொழிக்கும் இலக்கணம் வேறு என்பதை மிகமிகத் தெளிவாகத் தாமாக்கிய தோல்காப்பியப் பாயிர விருத்தியிற் கூறியிருக்கின்ருர். என்னை?

"தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட்படும், செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற் பாகுபாடுகளும் அகம், புறம் என்னும் பொருட்பாகுபாடு களும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும், இன்னோரன்னபிறவும் வடமொழியிற் பெறப் படாமையானும்" என்பது.

இதில் மாதவச் சிவஞானயோகிகள் எத்துணை விழிப்புடன், தமிழ்மொழியின் தனிப்பெரும் சிறப்பியல்களை மிகமிக நுணுகி யெடுத்தியம்பியிருக்கின்ருரென்பதை யெண்ணிப் பாருங்கள்.

இனி இத்தேசிகர் அவர்களைப்போலவே வடமொழி யின் கண்ணுள இலக்கண முடிபுகளைத் தமிழ்மொழியின் கட் புகுத்திப் பிற்றைஞான்றைப் பல தமிழ் இலக்கண நூல் களெழுந்து தமிழ் மொழிக்குக் கேடு சூழ்ந்தன. அந்நூல்கள்,

நன்னூல், சின்னூல், வீரசோழியம், பிரயோக விவேகம் என்பன. இந்நூல்களும், இன்னும் இவைபோன்ற பன்னூல்களும் எழுந்தாலும் முழுமுதலிலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின், செவ்வியை யழித்துத் தமிழ்மொழிக்குக் கேடுசூழ முடியுமா? முடியாது.

இனி, இங்ஙனம் தமிழ் மொழியை யிகழ்ந்தும், அதன்கண் வடமொழி இலக்கணமுடிபுகளைப் புகுத்தியும் அதன் இலக்கணச் செவ்விக்குக் கேடுசூழ்ந்ததுமன்றித் தமிழ்மக்களையு மிகழ்ந்து, வேசிமக்கள், அடிமைகள், போரிற் புறங்கொடுத்தோர் எனும் பொருள்களைத்தரும் சூத்திரர் எனுஞ் சொல்லாற் குறித்தும் வந்தனர். ஆரியமொழியி லென்ன வெழுதியிருப்பினும், அவை யெல்லாம் கடவுளாணையென நம்பும் ஒரு பிழையான எண்ணமும் தமிழ்மக்களிடையே யுண்டாதற்கேற்ற சூழ்ச்சிகளை ஆரியர் செய்தனர்; ஒரு குலத்திற் கொருமுறை கூறும், மனு முதலிய நூல்களைப் பெரிதும் போற்றி அவற்றையெல்லாந் தமிழ் மக்கட்கும் அறிவுறுத்தி அவர்களிடையே உயர்வு தாழ்வுக் கொள்கைகளைப் பிறப்புப்பற்றியே யுண்டாகச் செய்தனர். ஆனாற் பண்டிருந்தே தமிழ்மக்கள் ஒழுக்கங்கருதியே உயர்வு தாழ்வு குறித்து வந்தனர். எண்டொழுக்கமென்றது மக்கட்பண்பாகிய ஆறும் அறிவினிற்கேற்ப வொழுகலே. இவ்வுணர்ச்சியின் முதிர்ந்த நிலையை மெய்யறிவெனப் பெரியார்கள் கூறுவர். இம்மெய்யறிவு இல்லாத மக்களை ஆசிரியர் தொல்காப்பியனார் மாக்களெனவே கருதுகின்றார். இதனை,

"மாவும் மாக்களும் ஐயறி வினவே
மக்கள் தாமே ஆறறி வுயிரே

எனவரூஉம் நூற்பாவானறிக. இக்கருத்துப் பற்றியே ஆசிரியர் திருவள்ளுவரும்,

"அரம்போலக் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்"

எனக் கூறியருளினர்.

ஆகவே, தாய்மொழிப் பற்றற்ற சிலர் வடமொழியாளர்களின் கொள்கைகளையும், பழக்கங்களையும் தமிழ்மொழிக்கண் புகுத்திக் கேடு விளைக்கத் துணிந்த நுட்பமறிந்து உண்மை கண்டு செந்தமிழ்ப் பெருமை யுணர்தல் சீரியோர் கடனாம்.




## புதியது புனைந்த அறிவியற் புலவர்கள்

[திரு. N. குழந்தைவேலன் அவர்கள், B.A.]

### கலீலியோ (Galileo)

அறிவியற் றுறையில் முதற்படியில் வைத்து எண்ணப் படுபவர் இத்தாலிய தேயத்துக் கலீலியோ ஆவர். இவர் பிளாரன்ஸ் (Florence) பட்டினத்தில் 1564 - ஆம் ஆண்டில் ஓர் எளிய குடும்பத்திற் றோன்றியவர். இவர்தம் தந்தையார் வின்சென்சோ (Vincenzo) என்னும் பெரிய இசை நூலாசிரியர். இவர் பொருட்செல்வம் மிகுதியும் இல்லாதவர். கலீலியோ இளமையிலேயே ஓவியம் வரைதல், இசை பாடுதல, புதிய விளையாட்டுக்கருவி யமைத்தல் ஆகிய இவற்றில் திறமை யுற்றிருந்தார். தந்தையாரின் தூண்டுதலால் இவர் மருத்து வக்கல்வி பயிலவேண்டுவதாயிற்று. அக்காலத்துக் கிரேக்க மக்கள் (Greeks) அரிஸ்டாட்டில் (Aristotle) என்ற புலவர் கூறிய அறிவுரைகளில் குருட்டு நம்பிக்கை வைத்திருந்தனர். கலீலியரோ இப் புலவர் கூறிய உரைகளை நன்கு ஊன்றிப் பார்த்து முரண்பாடுள்ளனவற்றை அச்சமின்றி எடுத்துக் காட்டும் இயல்புடையவர். இதன்பொருட்டே கல்லூரியில் இவரை மிண்டர் (Wrangler) என்றழைத்தனர்.

கலீலியரே முதன் முதலில் தாமறிந்த உண்மைகளை ஆய்வுகளால் (Experiments) விளக்கிக்காட்டினவர். தமது 19-ஆம் ஆண்டிலேயே தொங்கட்டம் (Pendulum) அசைந்து ஆடுவதன் நுட்பங்களைக் கண்டறிந்தார். ஒருநாள் கோவிலில் தொங்கவிட்டிருந்த விளக்குக் கூண்டு காற்றில் அசைந்து ஆடுவதைக்கண்டு தமது நாடியின் உதவியால் கணக்கெடுத்துப் பார்த்தார். விளக்குக்கூண்டு நெடுந்தொலை வீசி ஆடினாலும் குறுகி ஆடினாலும் ஒவ்வொரு ஆடலுக்கும் காலம் எப்பொழுதும் மாறுபடாது ஒன்றேபோல் இருத்தலைக் கண்டுணர்ந்தார். தொங்கட்டம் கடிகாரம் சரியான நேரத்தைக் காட்டப் பயன் படுகிறது. தொங்கட்டத்தின் ஒவ்வொரு அசைவிற்கும் கடிகாரத்தில் பற்களோடியைந்த ஒரு சக்கரம் ஒரு பல் திரும்புகிறது. கடிகாரத்தின் சுருள் கம்பி (Main Spring) ஒரே அளவான ஓட்டத்தில் விரிவடையவும், அதனுதவியால் சக்கரங்கள் சுழலவும் தொங்கட்ட மின்றியமையாததாக இருக்கின்றது. கலீலியோ இம்முறையைக் கையாண்டதன் பயனாய் நாடியளக்கும்

க்ருவியைப் புதிதாகக் கண்டுபிடித்தனர். இது நோயாளியின் குருதி ஓட்டத்தை மிக எளிதில் காட்டினமையால் எல்லா மருத்துவர்களும் இவரைப் போற்றிப் புகழ்ந்தனர்.

வறுமையால் பிணிப்புண்ட கலீலியோ மருத்துவப் பட்டம் பெறுதற்குப் போதிய பொருளின்றி அப்பட்டமு மில்லாது தம் பெற்றோர் இருக்குமிடம் சேர்ந்தார். நல்வினைப் பயனால் தமது 24-ஆம் ஆண்டில் பைசா (Pisa) பல்கலைக் கழகத்தில் கணித நூலாசிரியராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இவர் தமது ஆராய்ச்சியின் பயனாக இக்கிரேக்க நாட்டுப் பெரியார் அரிஸ்ட்டாட்டிலின் அறிவு மொழிகளையும் உண்மையன்று என மறுக்கலாயினார். பெரிதொன்றும் சிறிதொன்று மான இரண்டு குண்டுகளை ஒரேகாலத்தில் உயரத்திலிருந்து விழச்செய்தால் பெரிதுதான் முதன் முதலில் நிலத்திற்போய் விழுமெனவும், பெரியது சிறியதைக்காட்டிலும் பதின்மடங்கு பருமனுள்ளதாயின் சிறியதைவிடப் பத்துப்பங்கு விரைவுடன் கீழ்நோக்கிச் செல்லுமெனவும் அரிஸ்டாட்டில் கூறியிருந்தார். இதை நன்கு ஆராயாது கிரேக்கர்கள் அவர்தம் உரைகளைப் பொன்னே போல் போற்றிவந்தனர். ஒருநாள் கலீலியோ பைசா பல்கலைக் கழகத்தின் ஆசிரியர் மாணவர் முதலியோ ரனைவரையும் ஒருங்கழைத்துச்சென்று அவர்கள் முன்னிலையில் அவ்வூர்க் கோபுரத்தின் உச்சியினின்று சிறு குண்டு ஒன்றையும் அதைவிடப் பத்துமடங்கு மிகுந்த எடையுள்ள மற்றொரு குண்டையும் ஒரே நேரத்தில் விழச்செய்தார். இரு குண்டுகளும் ஒரேநேரத்தில் நிலத்தைச் சார்ந்தன. ஆங்குக் குழுமியிருந்த மக்களனைவரும் இதனைக்கண்டு இறும்பூதெய்தினர். பின்னர், அரிஸ்ட்டாட்டிலைப் பொய்யராக்கிய கலீலியரே மாயக்காரரோவென ஐயுற்று மக்கள் அவரை மிக்க துன்புறுத்தலாயினர். ஆகவே கலீலியோ பைசா நகரை விட்டகன்று படுவா (Padua) என்ற இடத்தில் கணித நூலாசிரியராய் அமர்ந்தனர். அவர் தளரா ஊக்கமும் சிறந்த மனவலியு முடையவராயிருந்தார். அவர் கற்றவை யனைத்தையும் கசடறக்கற்று எவரினும் மேம்பட விளங்கினார். அவர் எப்பொருளையும் மிக நுட்பமாய் ஆராயும் வல்லமைபெற்றிருந்தார். அக்காலத்துக் கணித நூற் புலவர்களிற் தலைசிறந்து விளங்கினதுமன்றி அவர் வான நூற் புலமையினும் இயற்கை நூல் ஆராய்ச்சியினும் மிக வல்லுநராயிருந்தார். அவர் தம் பேராற்றல் நாடெங்கும் பரவத் தலைப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் அவர் தம் அரும் பெருஞ் சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புற்றனர். உரோம தேயத்துக் காவியங்கள் பலவற்றையும் அவர் மனப்பாடமாகக் கற்றறிந்தவராகலின் எல்லாராலும் நன்கு மதிக்கப்பெற்றார்.

அவர் தமக்கு ஐயம் நிகழ்ந்தபோதெல்லாம் கற்றறிந்த அறிவாளிகளிடம் எளிமையோடு கேட்டுத் தம் ஐயப்பாடுகளை அவ்வப்போது நீக்கிக்கொள்ளும் இயல்புவாய்ந்தவரா யிருந்தார்.

சின்னாட் கழித்து இவர்தம் தந்தையார் இறந்துபடவே குடும்பச் சுமையை இவர் தாங்கவேண்டியவரானார். தமது குடும்பத்திற்குப் பொருள்தேடவேண்டிய முதன்மையும் இவர்க்கு ஏற்பட்டது. இவர்தம் அரிய ஆராய்ச்சியின் பயனாக வானநூற் புலவர்களுக்கு இன்றியமையாததாகவுள்ள தொலைநோக்காடி (Telescope) இவரால் புதிதாய்க் கண்டுபிடிக்கப்பெற்றது. இக்கருவி சேய்மையிலுள்ள பொருளை அண்மையிலுள்ளதுபோற் காட்டுவதற்கு மிகுதியும் பயன்பட்டது. கலீலியோ ஓர் ஈயக் குழாயின் முனைகளில் வளைந்த கண்ணாடி (Lens) வில்லைகளை அமைத்து அக்குழாய்வழி நோக்கியபோது சந்திரன் மும்முறை அருகிலும் பன்முறை பெரிதுமாகத் தோன்றிற்று. இந்நிலப் பரப்பைப்போன்று திங்கள் மண்டிலத்திலும் மலைகளும் பள்ளத்தாக்குகளும் நிறைந்திருத்தலையும், வியாழ (Jupiter) மண்டிலத்தைச் சுற்றிலும் நான்கு கோளங்க ளிருத்தலையும், சனி (Saturn) மண்டிலத்தைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் (Ring) தோன்றுவதையும் கலீலியோ கண்டறிந்தார். கண்ணுக்கெட்டாத தொலைவிலுள்ள எண்ணிறந்த விண்மீன்களையும் அவர் தமது கண்ணாடியி னுதவியால் ஆராய்ந்து பார்த்தார். அதுவுமன்றி அவர் தாம் கண்ட உண்மைகளை மக்கட்குப் பயன்படுமாறு வெளியிட்டார். இவ் வற்புதத்தைக் காண நகர மாந்தர் பலர் அவர் வீட்டு வாயிலிற் குழுமியிருந்தனர். கலீலியோ மக்க ளனைவரும் தமது கண்ணாடியால் வானத்தின் காட்சிகளை நேரிற் காணுமாறு செய்தனர். யாவரும் அவ் வளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சியைக்கண்டு வியப்புற்றனர். ஆயினும் அரிஸ்ட்டாட்டிலின் உண்மைகளைப் பின்பற்றிய அம்மக்கள் தம் அகவிருள் நீங்காராகி அக்காட்சிகள் கண்ணாடி இல்லாதபோது கண்ணுக்குப் புலப்படாதிருந்தமையால் கலீலியோ தங்களை ஏமாற்றுதற்பொருட்டு ஏதோ சூழ்ச்சிசெய்வதாகவே எண்ணினர். மக்கள் அவர் கூறிய உண்மைகளைச் சிறிதும் நம்பாமல் எள்ளி நகையாடினர்.

கலீலியோ தாம் கண்ட உண்மைகளைப் பரப்புதற் பொருட்டு உரோம் நகரடைந்தார். வானத்திலுள்ள வியத்தகு காட்சிகளைக் கண்டு பலரும் வியப்பெய்தினர். ஆயினும் கிறித்துவ மதக்கோட்பாட்டின்படி இந்நிலவுலகே பிறவற்றினும் நனி சிறந்ததென்றும், அஃது அசைவற்றதென்றும், வானில் தோன்றும் ஞாயிறு திங்கள் முதலியன இப்பூவுலகைச்

சுற்றி வருகின்றன என்றும் மக்கள் நம்பியிருந்தனர். கலீலியோ ஞாயிறு பூமியைச் சுற்றவில்லை என்றும், பூமியும் மற்ற கோள்களுமே பகலோன் மண்டிலத்தைச் சுற்றிவருகின்றன வென்றுங் கூறி அவ்வுண்மையை விளக்கிக்காட்டினார். கிறித்து சமயவாதிகள் கலீலியோவால் கண்டுபிடிக்கப்பட்ட வானக் காட்சிகளின் உண்மைகளை அறியாராகி, தங்கள் வேதத்திற் கூறியுள்ள பூமியின் பெருமைக்கே அழிவு நேர்ந்து விட்டதென நினைத்து இவற்றைக் குறிக்கும் புத்தகங்க ளனைத்தையும் மக்கள் படிக்கக்கூடாதெனத் தீயிலிட்டுக் கொளுத்தி விட்டனர். கலீலியரோ தாம் கண்டுபிடித்துக் கூறியவை முற்றிலும் உண்மையென நிலைநாட்டினர். இறைவன் பேரருட்டிறத்தினால் மக்கள் பெற்றிருக்கும் பகுத்தறிவை நல்வழியிற் பயன்படுத்திப் புதுப் புனைவுகளின் உண்மையை அவர்கள் உணரும் வண்ணம் எத்துணை முயன்றும் தமதெண்ணம் வீணாய்ப்போனமையால் கலீலியோ மனம் உடைந்து உரோம் நகரைவிட்டு அகன்றார்.

இக்காலத்தில் கலீலியோவின் ஆராய்ச்சிகளுக்கு டஸ்கனி (Tuscany) நாட்டுச் சிற்றரசரின் ஆதரவு கிடைத்தது. அவ்வரசனின் வேண்டுகோளுக்கிணங்கி அவர் தமது உறைவிடமாகிய பிளாரன்சுக்குச் சென்றார். அரசன் ஆதரவுபெற்றிருந்தும் அவர்தம் கொள்கைகள் கிறித்துவமதக் கோட்பாட்டிற்கு முரண்பட்டிருந்தமையின் அவருக்கு அளவிறந்த இன்னல்கள் உண்டாயின. பிளாரன்சில் ஏழு ஆண்டுகள்வரை வான நூலாராய்ச்சியிற் காலங்கழித்தனர். அதுகாறும் மக்கள் அறியாத பல வியத்தகு செயல்களைக் காட்டுவித்தார். பல்வேறு புதிய கருவிகளையும் கண்டுபிடித்தார். தெர்மாமீட்டர் (Thermometer) என்னும் சூடறி கருவியையும், கம்பாஸ் (Compass) என்னும் திசையறி கருவியையும் புதிதாக அமைத்தார். திணிப்பொருள்களின் ஏணை (மையத்தை) (Centre of gravity of solids)க் கண்டுபிடிக்கும் நுட்பங்களை எடுத்துக் காட்டினார். அவர் கண்டுபிடித்த உண்மைகள் பிற்காலத்திய அறிவுநூல் ஆராய்ச்சிகட்கும், அதன் வளர்ச்சிக்கும் பற்றுக் கோடுகளாய் அமைந்தன.

கலீலியோ தமது அறுபதாம் ஆண்டில் மீண்டும் உரோம் நகருக்குச்சென்று புதிதாய் முடிசூட்டப்பெற்றிருந்த கிறித்துவப் பெருங்குருவை (Pope)க் கண்டு தாம் ஆய்ந்துணர்ந்த உண்மைகளை ஏற்றுக்கொள்ளுமாறு மிகவும் வேண்டினார். அப்பெருங்குரு இதற்கு இணங்காவிடினும் அவர்தம் கருத்துக்களை ஒரு நூலில் வெளியிடுமாறு கட்டளையிட்டருளினர். பல்லாண்[illegible] தாம் அரும்பாடுபட்டு ஆராய்ந்த [illegible] பல்

களைத் தொகுத்து அறிவு நூல் ஒன்று எழுதி வெளியிட்டனர். பின்னர் உரோம மக்களனைவரும் கலிலியோவின் ஆராய்ச்சித் திறத்தைக்கண்டு பேருவகை யடைந்தனர். இஃதிவ்வாறாக ஒரு சாரார் கலிலியோ கிறித்துவ சமயத்திற்கே பெருந் தீங் கிழைத்துவிட்டதாக முறையிட்டனர். முடிவில் திடீரென உரோமநாட்டு நீதிமன்றத்திலிருந்து ஓர் ஆணை பிறந்தது. கலிலியோவின் புத்தகங்கள் கிறித்துவமதக் கோட்பாட்டிற்குப் பொருத்தமற்றவையென்று கூறி அவை யனைத்தையும் ஒன்று விடாமல் தொகுத்து எடுத்து உரோம் நகருக்கு அனுப்பினர். கலிலியோ கூறிய உண்மைகள் தங்கள் கிறித்துவமதக் கோட்பாட்டிற்கு மாறானவையென்று அவர் குற்றம் (Charge of heresy) சாற்றப்பட்டார். வயது முதிர்ந்துநடக்கவும் ஏலாதவ ராயிருந்த கலிலியோவை நீதிமன்றத்திற்குத் தாங்கிச்சென்ற னர். ஆங்கு அவரை மண்டியிடச்செய்து பூமி சூரியனைச் சுற்றிவருகிறதெனத் தாம் மறுமுறை நினைப்பதும், சொல் வதும் இல்லையென வாக்களிக்கும்படி வற்புறுத்திக் கேட்ட னர். இக்கட்டளையை மறுத்துரைக்கின் தம்மைப் பல கொடு மைக்குட்படுத்தித் தம் உயிரையும் மாய்த்திருப்பாராகலின் வெளித் தோற்றத்திற்கு ஒருவாறு ஒப்புக்கொண்டவர்போல் அவர் நடித்துக்காட்டி மண்டியிட்டு எழுவதன்முன், "எப்படி யாயினும் இவ்வுலகம் அசைந்தே தீரும்" எனக் கூறினரெ னின் இவர் தம் ஊற்றத்தை என்னென்று கூறுதும்! உரோம அதிகாரிகள் கலிலியோவுக்கு உயிர்ப்பிச்சை யளித்து அவரை அரசியற் கைதியாக்கித் தமதில்லத்தைவிட்டு அயலிடம் செல் லாது தடுத்துவிட்டனர்.

இக்காலத்திற்றான் ஆராய்ச்சி யுரைகள் நிறைந்த பல அரிய புத்தகங்கள் இவரால் இயற்றப்பட்டன. கலிலியோ தமது வாழ்நாள்முழுவதும் இயற்கைப் பொருள்களின்இயல்பு களை ஆராய்வதிலேயே செலவிட்டுத் தமது 78 - ஆம் ஆண்டில் விண்ணுல கெய்தினர். அவர் மறைந்தபின்னரே உலகிற்கு அவரது நன்மதிப்புத் தெரியலாயிற்று. பிளாரன்ஸ் நகரத்து மாந்தரனைவரும் 3000 கிரவுன் நாணயங்கள் செலவிட்டுப் பளிங்குக்கல்லால் அவருக்கு ஒரு சமாது அமைத்தனர். அவர் நினைவுக்கு அறிகுறியாகச் சிறந்த கட்டிடம் ஒன்று நிறுவப்பெற்றது. இத்தாலிய தேயத்தில் கற்றோரனைவரும் ஒருங்குசேர்ந்து கலிலியோவின் திருவிழாவைக் கொண்டாடி னர். உள்ளத்தாற் பொய்யாதொழுகிய கலிலியோ உலகத் தார் உள்ளத்துளெல்லாம் நிலைபெற்றிருத்தலை இற்றைக்கும் கண்கூடாகக் காண்கின்றோம்.

---

# "ஊடலும் கூடலும்"

[வித்வான் மா. இராசமாணிக்கம் அவர்கள் B. O. L.]

உத்தம இலட்சணங்கள் அமைந்த காதலர் தம்முள் ஊடல் முன்னும் கூடல் பின்னும் நிகழ்வது இயல்பு. இவ்வுண்மையைப் பண்டைத்தமிழ் இலக்கியங்கள் இன்புற இயம்புகின்றன. இதனை நமது வாழ்க்கையிலுங் காணலாம். இக்காலக் காதலிமார் ஊடினால் உண்மையறியா ஆடவர் பலர் அக்காதலியரை அடித்துத் துன்புறுத்துவர். இஃது அறியாமையேயன்றி வேறன்று. காதலியர் ஊடுதல், கூடுதலில் இன்பம் பயக்கும். ஒரு காரணத்தைக் கற்பித்து அதனால் தலைவி வீணாகச் சீற்றங்கொள்ளலும், தலைவனை வெறுத்தலும் ஊடலாம். அவ்வேளை, தலைவன் இதம் பல கூறி அவள் ஊடலைத் தீர்ப்பன்; உதையும் படுவன். ஆனால், அது குற்றமன்று. இங்ஙனம் நிகழ்வன காதலில் நிகழும் குறும்புகள். இவை கூடலுக்கு இன்பந்தருவன. இவ்வுண்மையைக் காதலர் பரீட்சித்து இன்பத்தை நுகர்வாராக. 'ஊடல் கூடல்' என்பதைப் பற்றிப் புவியர சேத்தும் கவியரசராய கம்பர் பெருமான்யாது அறைந்துள்ளார் என்பதைக் காண்போம்.

ஒரு மாது தன் நாயகன்பால் ஊடல் கொண்டவுடனே தான் அணிந்துள்ள ஆபரணங்களைக் கழற்றிச் சாளர வழியே வீதியில் எறிந்து விடுகின்றாள். பின்னர், அவள் சீற்றத்தைத் தணிக்க நாயகன் படும்பாடு சொல்லத்தரமன்று. நாயகி ஊடல் தீர்ந்ததும் இருவரும் மாறிமாறிச் சந்தனக்குழம்பைப் பூசிக் கொள்கின்றனர். அது அளவுகடந்து வழிந்து வீதியில் தேங்கியிருக்கும். ஒவ்வோர் இல்லத்திலும் இந்நிகழ்ச்சி ஒவ்வொரு நாளும் நடத்தலால் வீதியில் மாலைகளும் சந்தனச் சேறும் ஒவ்வொருநாட் காலையிலும் காணலாம். சாலையில் குதிரைமீது செல்லும் மக்கள் இவற்றால் இடர்ப்படுவர். வீதியிற் கிடக்கும் ஊடி நீத்த மாலைகள் குதிரையின் கால்களில் அகப்பட்டுச் சுற்றிக்கொள்வதால் அவை, மேற்செல்ல முடியாது தவிக்கின்றன. குதிரை வீரர் கீழிறங்கி நடந்து செல்ல முயல்கின்றனர். ஆனால், அவர் விருப்பமும் நிறைவேறல் எளிதன்று. ஏன்? வீதியில் தேங்கிக் கிடக்கும் சந்தனக் குழம்பு அவர்களை வழுக்கி விழச் செய்கிறது. 'இவ்வாறு, காதலர் முன்னாள் ஊடினும் கூடினும்-மறுநாள் காலை அவ் வீதி வழியே செல்வோர்க்குத் துன்பமே' என்று காதலர் செய்தியைக் கம்பர் குறுநகையோடு நமக்குக் கூறுகின்ற நயம் பாராட்டத் தக்கதே!

"ஆடுவார் புரவியின் சூரத்தை யார்ப்பன
சூடுவார் இகழ்ந்தவத் தொங்கன் மாலைகள்
ஓடுவார் இழுக்குவ ஆட ஹூடுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே"

—(க. ரா. நகரப் படலம்)

'ஊடல் கொண்ட மாதர், காதலர் எத்துணை வேண்டினும் சிறிதுநேரம் தம் ஊடலைத் தீரார்; ஊடல்தீர்ந்து கூடல் வயப்பட்ட மாதர் ஆடவர் கரங்களில் கொடிகள்போல் துவள்வர்' என்ற உண்மையைக் கம்பர் உவமைவாயிலாகக் காட்டும் திறம் கவனிக்கத்தக்கது: 'வலிபொருந்திய திண்ணிய தோள்களையும் மிக்க ஒளிவிளங்குகின்ற மேனியையும், மலர்ந்த பூமாலைகளையும் உடைய ஆடவர் இடத்தில் கூடினரான மயில் போன்ற சாயலையுடைய மாதர்போலச் சில கொடிகள் அசைந்து துவண்டன; சில பூங்கொம்புகள் ஊடல் கொண்ட மாதர்களைப்போல் கைக்கெட்டாமல்நின்றன' என்று கூறுமுகத்தான் யாம் முற்கூறிய உண்மையைப் புலவர் புகன்றுள்ளார்.

"உலந்தரு வயிரத் திண்டோள் ஒழுகிவா ளொளிகொள் மேனி
மலர்ந்தபூந் தொடையல் மாலை மைந்தர்பால் மயிலி னன்னார்
கலந்தவர் போல ஒல்கி யொசிந்தன; சிலகை வாராப்
புலந்தவர் போல நின்ற உளசில பூத்த கொம்பர்."

(க. ரா. பூக்கோய் படலம்)

இனி, தலைவி ஊடல் கொள்ளவிருக்கும் காரணங்கள் யாவை? எனக் கம்பர் கூறுகின்றார் என்பதைக் காண்போம். ஸ்ரீராமன் திருமணத்திற்காகத் தசரதன் அயோத்திவிட்டுப் பரிவாரத்துடன் மிதிலை நோக்கிச் செல்கையில் வழியில் தங்குகிறான். அங்கு, அப்பரிவாரத்தில் உள்ள காதலர் புரியும் திருவிளையாடல்களைக் கம்பர் கூறிப் பெண்கள் ஊடலுறும் காரணங்களையும் கழறுகின்றார்.

'ஒருத்தி, தன் காதலன் பின்புறமாக அவனறியாவண்ணம்சென்று அவன் கண்களை மூடுகின்றாள். கண்களை மூடியவர் இன்னார் என்பதறியாத் தலைவன் 'யார் அது?' என்று வினவுகின்றான். அவ்வளவே: தலைவிக்கு அக்கேள்வியில் ஐயம் பிறக்கின்றது. 'நம்மையன்றி இவன் கண்களைமூட வல்லவர் யார் இருக்கின்றார்? ஒருவரும் இல்லையே. அங்ஙனம் இருக்க, இவன் 'யார்?' என்று கேட்க வேண்டிய அவசியம் இல்லையே! இவன் கண்களைப் பொத்தும் உரிமை எனக்கன்றி வேறு ஒருத்திக்கும் உண்டுபோலும்! ஓஹோ!

இதென்ன விந்தை!' என்று நினைத்து அதுபற்றி அவனிடம் ஊடல் கொள்கிருள். (உண்மையில் தலைவன் வேறு மகளிரை நினைத்தவன் அன்று; தலைவியின் ஐயமே அவள் ஊடல் கொள்ளக் காரணம்.) 'இவ்வாறெல்லாம் தலைவி ஊடல் கொள்ளுதலைக் காண்க' என்று கம்பர் குறுநகையோடு நவில்கின்றூர்.

"போரென்ன வீங்கும் பொருப்பன்னபொலங்கொள் திண்டோள்
மாரன் அனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்பு தைப்ப
ஆரென்ன வோடு மனலென்ன அயிர்த் துயிர்த்தாள்."

—(க. ரா. பூக்கோய் படலம்)

ஒரு தலைவன் இளநீர்க்காய் ஒன்றை நோக்கி, 'அம்மா! இது, மங்கையர்தம் கொங்கைகளை ஒத்திருக்கிறது' என்று ஆச்சரியத்தால் கூறுகிருன். அவ்வளவில் தலைவி சினங்கொண்டு, 'இவ்விளநீர்க்காய் எந்த மாதர்களுடைய கொங்கைகளை நிகர்க்கும்?' என்று விம்மிக்கொதித்து முகம் வியர்க்கப் பெருமூச்சு விடுகின்றூள். என்னே! நமது கொங்கையைச் சுட்டிக்கூருது பொதுப்பட மாதர் கொங்கைகள் என்று சொல்கின்றூன். "மாதர்" என்னும் பன்மைச்சொல் இவன்வாய்வழிவரலாமோ? இவன் மாதர் பலரிடம் நட்புக் கொண்டுளன் போலும். நாம் இதனை அறியாமற் போனேமே! ஆ!!" என்று மனம் புண்ணுகின்றூள். இஃது, அவள் மடமையாற்கொள்ளும் வீண் ஐயமேயன்றி வேறென்? தலைவன் 'மாதர் கொங்கை' எனப் பொதுப்படக் கூறின் இவள் சீற்றம் கொள்ளக் காரணம் இல்லை, இருந்தும் இவள் அறியாமையாற் சீற்றமும் ஐயமும் கொள்கின்றூள். 'மாதர் இயல்பு அஃது' என்று கம்பர் கூறுகின்றூர்.

"செம்மாந் தெங்கின் இளநீரையோர் செம்மல் நோக்கி
அம்மா! இவைமங் கையர்கொங் கைக ளாகும்" என்ன
எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன? என்றோர் ஏழை
விம்மா வெதும்பா வெயரா முகம்வெய் துயிர்த்தாள்.

—(க. ரா. பூக்கோய் படலம்)

மாதர் ஊடல் கொள்ளும் பரிசைக் கூறிய கம்பர், அம்மாதர் ஊடல் தீர்ந்து காதலர்பால் காதல் விஞ்சி அவரை அடைய அவர் செய்யும் முயற்சியையும் முறுவலோடு விளக்குகின்றூர்.

தன் தலைவனோடு ஊடல் கொண்ட ஒருத்தி, அவனைச் சேர விரும்பியவளாய்த் தான் பறித்துக் கொள்ளக்கூடிய

மலர்கள் பலவிருந்தும், அவற்றைப் பறியாமல், எட்டாதிருந்த மலரைப் பார்த்து 'இதனைப் பறித்துக்கொடு' என்று குயிலைக் கரங்குவித்து வேண்டுகின்றாள். தான் படும் துன்பத்தைச் சகியாத் தலைவன் போந்து மலர் பறித்துத் தன்னுடன் கூடுவான் என்பதே அவளது விருப்பம். இது கூடலுக்கு மாதர் செய்யும் சூழ்ச்சிகளில் ஒன்று.

"மைதாழ் கருங்கண்கள் செவப்புற வந்து தோன்ற
நெய்தாவும் வேலா னொடுநெஞ்சு புலந்து நின்றாள்
எய்தாது நின்ற மலர்நோக்கி யெனக்கி தீண்டுக்
கொய்தீதி யென்றோர் குயிலைக்கரங் கூப்பு கின்றாள்."

—(க. ரா. பூக்கோய் படலம்)

மற்றொருத்தி, தன் நாயகன் தன்னைப் பணிந்து வேண்டிய போதெல்லாம் ஊடல் தீராது, பிறகு அவன்பால் விருப்பம் மேலிட்டவளாய் அவனை அடைய வழியறியாமல் தயங்குகின்றாள். இருக்கும் இடத்திற்குத் தன் கிளியைப் பறக்கவிட்டு அதனைத் தொடர்பவள்போல் அவன் இருக்கும் இடத்தை அடைவாள். மாதர் மடமையை நோக்குங்கள்! கணவன் பணியும்போது மிடுக்குடன் இருக்கும் மாதரார், பின் அவனை யடையத் தாமே சூழ்ச்சி செய்து போகும் விந்தை சால அழகியதே!

யாழொக் குஞ்சொற் பொன்னனை யாளோர் இகல்மன்னன்
தாழத் தாழாள் தாழ்ந்த மனத்தாள் தளர்கின்றாள்;
ஆழத் துள்ளுங் கள்ள நினைப்பால் அவனின்ற
சூழற் கேதன் கிள்ளையை யேவித் தொடர்வாளும்.

—(க. ரா. பூக்கோய் படலம்)

ஒருத்தி தன் தலைவனை யழைத்துவரத் தோழியை ஏவுவாள். தோழி மீண்டுவராமையைக்கண்டு மனம் புண்ணுவாள். மலர்ப் படுக்கையில் படுத்துள்ள வேறு ஒருத்தி, தன் தலைவனின் பெயர்களைச் சொல்லும் கிளியை மனமகிழ்ந்து தழுவுவாள். ஒருத்தி, தனக்குத் துணையாயிருக்கும் கிளியைத் தழுவி "என் ஆவிபோன்ற நாயகனை நீ அழைத்து வரவில்லை. நீ இருந்து எனக்கு என் பயன்? துன்பம் செய்வதில் நீ எனக்கு அன்றிலையே யொப்பாவாய்" என்று அழுது சீறினாள். தன் கணவனோடு ஊடல்கொண்டு அமளியில் அவனுடன் இருந்த ஒருத்தி ஊடல் தீர்ந்து கூடல் கொள்ள விரும்பினாள். அதனைக் கணவன் உணர்ந்தானில்லை. தான் இன்னும் தூங்கவில்லை யென்பதையும் உரையாடுவதற்கு ஏற்றவளாய் இருக்கிறாள் என்பதையும்அவனுக்கு அறிவிக்க, அரைத் தூக்கத்தில் சோம்பல்முரிப்

பவளைப்போல் பாவனைசெய்து 'இப்போது எத்தனை நாழிகை சென்றன?' எனக் கேட்டாள்.

'கலையை யுருவிப் பூரிக்கின்ற அல்குலையுடைய ஒரு தலைவி, தன் கணவனை இறுக அணைத்து, மலையும் உருவழியும்படி திண்ணியதாகவுள்ள அவன் மார்பில் தன் முலைகள் ஊடுருவிச் சென்றனவோ என அவனது முதுகைப் பார்த்தாள்' என்று கூறுமுகத்தான் ஊடல் தீர்ந்து கூடும் மாதர் காதலரிடத்துக் கொண்ட கரைகடந்த காதல் நுண்மையைக் கவின் பெறக் கம்பர் காட்டுகின்றார். இறுக அணைத்தலே காதல் இன்பத்தில் கூடும் தலைவன் தலைவியர் செய்யத்தக்க இன்பச் செயல்.

"கொலையுரு வமைந்தெனக் கொடிய நாட்டத்தோர்
கலையுரு அல்குலாள் கணவற் புல்குவாள்
சிலையுரு வழிதரச் செறிந்த மார்பிற்றன்
முலையுரு வினவென முதுகை நோக்கினாள்."

—(க. ரா. உண்டாட்டுப் படலம்)

மற்றொரு தலைவி தன் ஊடலைத் தீர்த்துக் கணவனைக் கலந்தணைய விரும்பியவளாய்ப் பொய்யாகச் செய்யும் தன் நித்திரையில் கனவுகண்டதாகப் பாவித்து அதன் உதவியால் கணவனை அணைத்துக்கொண்டாள். இஃது ஊடல் கொண்ட மாதர் கூடல் கொள்ளற்குச் செய்யும் சூழ்ச்சியே. இது நம்மவர் வாழ்க்கையிலும் காணலாம். இதனைக் கம்பர் குறுநகையோடு கூறும் திறம் வியக்கத் தக்கதே!

"துனியுறு புலவியைக் காதற் சூழ்சுடர்
பனியெனத் துடைத்தலும் பதைக்குஞ் சிந்தையாள்
புனைகுழல் ஒருமயில் பொய்யு றங்குவாள்
கனவெனு நலத்தினாள் கணவற் புல்லினாள்"

—(க. ரா. உண்டாட்டுப் படலம்)

ஊடியபின் கூடலே இன்பத்திற்கு ஏற்றதாகும். ஊடல் இல்லாக் கூடல் கூடலாகாது.

"ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்" என்ற வள்ளுவர் வாய்ச்சொல்லும் இதற்குச் சான்றாதல் கண்டு களிக்க.

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### பாலை

*தலைவன் பிரிந்து சென்றனனாக, அவனது பிரிவிற்கு ஆற்றாது வருந்தும் தலைவியைக் கண்டு வருந்திய தோழிக்குத் தலைவி கூறியது.*

வெள்ளிவீதியார் பாடியது

**27.** *கன்று முண்ணாது, கலத்தினும் படாது*
*நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்*
*கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது*
*பசலை யுணீஇய வேண்டுந்*
*திதலை யாகத்தெம் மாமைக் கவினே.*

*என்பது பிரிவிடை யாற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.*

பதவுரை:—

*கன்றும் உண்ணாது—கன்றும் அருந்தாமல், கலத்தினும் படாது—பாத்திரத்திலுங் கொள்ளாமல், நல் ஆன் தீப் பால்—நல்ல பசுவின் இனிய பாலானது, நிலத்து உக்காங்கு—வெறுந்தரையிற் சொரிந்துவிட்டாற் போல, திதலை ஆகத்து எம் மாமை கவின்—சுணங்கு பரந்த மார்பிடத்துளதாகிய எம்முடைய மாந்தளிர்போன்ற அழகியநிறத்தின் விளக்க மாந்தன்மை, எனக்கும் ஆகாது—எனக்கும் பயன்படாமல், என்னைக்கும் உதவாது—என் தலைவனுக்கும் பயன்படாமல், பசலை உணீஇய வேண்டும்—பசலை என்னும் நோயால் உண்ணப்படல் வேண்டும்போலும் !*

*இனிய பாலை நிலத்திற் சொரிந்தாற்போல் என் அழகு வறிதாயிற்று.*

*கலம்—பாத்திரம். பசலை—மகளிர்க்குத் தலைவர் பிரிவால் காதலின் வேகத்தால் காணப்படும் நோய். 'பசலை மெய்யாட்டி'—*

என்பதுங் காண்க. கண்ணாடியின்மேல் ஆவிபோல் தோன்றும் மேனியின் நிறம். மாமை மாந்தளிரின் நிறம். என்ஐ=என்னை=தலைவன். கவின்—அழகு. திதலை—சுணங்கு, தேமல்.

பசத்தல் மகளிர்க்குத் தலைவர் பிரிவால் நேர்வது. பசத்தலால் மகளிர்மேனி நிறம் மாறும்.

1. "என் அணிநலம் போர்ப்பதுபோலும் பசப்பு." —(கலி.—33—5)

2. "வான்றருங் கற்பினாள் நிறனோடிப்
பசப்பூர்த லுண்டெனை" —(கலி.—16—20—21)

3. "பன்னாளும் படரப் பசலையா லுணப்பட்டாள்" —(கலி.—48—16)

4. "பாயின பசலையாற் பகற்கொண்ட சுடர்போன்றாள்" —(கலி.—132—10)

5. "மேனி மறைத்த பசலையாள்" —(கலி.—143—6)

என்பவற்றாலறியலாம்.

"கன்றுமுண்ணாது ..............நிலத்துக்காங்கு" என்பது பயனின்றிக் கழிதற்கு வந்த உவமை.

'பசலையுணீய வேண்டும்'—"உண்டற்குரிய அல்லாப் பொருளை உண்டன போலக் கூறலு மரபே"—(தொல்.—பொருளியல்—19) என்பதனால் மரபுபற்றி வந்தது.

உணீய வேண்டும்—இருசொற்கள் ஒருசொல் நீர்மைத்தாய் வந்த ஒருவகை வியங்கோள்.

## மேற்கோள் விளக்கம்:—

1. "கன்று முண்ணாது ...........கவினே"—

"இது வெள்ளி வீதியார் பாட்டு."மள்ளர் குழீஇய......மகனே" இது காதலற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை, தத்தம் பெயராற் கூறிற் புறமாம் என்று அஞ்சி வாளாது கூறினர்"

—(தொல்.—அகத்.—பக்.—146)

இதனால் இச்செய்யுள் வெள்ளிவீதியார் என்பவரால் பாடப்பட்டது என்பது வெளிப்படை. இதனைக் கொல்லன் அழிசி பாடியது என்று சில பிரதிகள் அறிவிக்கின்றன.

2. 'எனக்கு மாகா தென்னைக்கு முதவாது'

—"இது தலைவி என்னை என்றதற்கு மேற்கோள்"

—(தொல்—பொருள்.—பக். 859)

3. "கன்றுமுண்ணாது......கவினே"
அது பசலை பாய்தல்—பசலை பாத்தல்.
—(தொல்.—மெய்.—54)

4. "பசலையுணீஇயர் வேண்டும்" —(நன்—மயிலை. 218 பக்)

"செய்யியர் என்னும் எச்சமும் எதிர்காலமும் இருதொழிலும் கொண்டன" என்பதற்கு மேற்கோள்.

5. "பசலை யுண்ணியர் வேண்டும்'—

"இடையினைந்தும் வினைமுதலுங் கொண்டன" என்பதற்கு மேற்கோள். —(நன்—சங்கர. பக் 181)

6. "கன்றுமுண்ணாது......கவினே"—பசலை பாத்தல், பசலை பாய்தல் என்பதற்கு மேற்கோள்.
—(இலக்கணவிளக்கம்.—பக். 537)

1. 'பசலை யுணீஇய வேண்டும்'—
(1) "பசலை யுணீஇயர் வேண்டும்''—பிரதிபேதம்.
(2) "பசலை யுண்ணியர்வேண்டும்''—பிரதிபேதம்.

2. 'திதலை ஆகத்தெம்'—'திதலை அல்குலெம்'—பிரதிபேதம்.

"கன்றுமுண்ணாது......மாமைக்கவினே"—இது காதல் கைம்மிகுதற்கு மேற்கோள். —(தொல்.—களவு, இளம். பக் 180)

மெய்ப்பாடு—அசைவுபற்றிய அழுகை.
பயன்—செலவழுங்குவித்தல்.

## பாலை

தலைவனது பிரிவால் வருந்திய தலைமகளது ஆற்றாமையைக் கண்டு கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.

ஔவையார் பாடியது

28. முட்டு வேன்கொல் தாக்குவேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்
டாஅ வொல்லெனக் கூவு வேன்கொல்
அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே.

என்பது வரைவிடை ஆற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது.

பதவுரை:—

முட்டுவேன் கொல்—நான், என் தலையை முட்டிக்கொள்வேனா? தாக்குவேன்கொல்—பிறரை எதிர்த்துத் தாக்குவேனா? ஓர் பெற்றி மேலிட்டு—ஓர் காரணத்தை மேலாகக் காட்டி, ஒல் எனக் கூவுவேன் கொல்—ஒல் என்று உரக்கக் கத்துவேனா? அலமரல் அசை வளி துரப்ப—துன்பத்தைத் தரும் சுழன்றுவீசுங் காற்று அடிக்க, என் உயவு நோய் அறியாது—என்னுடைய வருத்தம் செய்யும் காமநோயை அறியாது, துஞ்சும் ஊர்க்கு—தூங்குகின்ற இவ்வூராரைக் குறித்து, ஆஅ—அந்தோ! ஒரேன் யானும்—நானும் செய்வது அறியேனாயினேன்.

பெற்றி—காரணம். ஆ அ—இரக்கக்குறிப்பு; அளபெடுத்துத் தனித்து ஒரு சீராயிற்று. கொல்—இடைச்சொல்; இரக்கப் பொருள். அலமரல்—துன்பம். ஊர்க்கு—இடவாகுபெயர், உருபு மயக்கம். ஓர்தல்—அறிதல்.

இச்செய்யுள், தலைவி, தலைவன் பிரிவாற்றாமைக்கு வருந்துவதையும், அவளது மனநிலையும், அவள் துஞ்சாமையும், ஊரார் இனிய உறக்கம் கொள்வதையும், மென்காற்றேயாயினும் அவளுக்குத் துன்பந்தருதலால் காமநோயால் வருந்தும் அவளுக்குத் தேகத்திற்குத் துன்பந்தரும் சுழற்காற்றொப்ப விளங்குவதையும் கூறுகின்றது.

முட்டுவேன்கொல், தாக்குவேன்கொல், கூவுவேன்கொல் என்பன காமநோயால் வருந்தும் தலைவி மனத்தெழுந்த வேகத்தால் கூறிய சொற்களாகும். இதனை,

"இவ்வளவிற் செல்லுங்கொல், இவ்வளவிற் காணுங்கொல் இவ்வளவிற் காதல் இயம்புங்கொல், இவ்வளவில் மீளுங்கொல் என்றுரையா விம்மினன்" என்பதனோடு ஒப்பிட்டுக்காண்க.

"முட்டுவேன் கொல்"—இதனை, 'மூட்டுவேன்கொல்' என்று பாடங்கொள்வாருமுண்டு. அலமரல்—சுழலல்—அலமா - பகுதி.

"அலமர றெருமர லாயிரண்டுஞ் சுழற்சி"

—(தொல்—சொல்—உரி—13)

**மெய்ப்பாடு**—பிணிபற்றிய இளிவரல்.
**பயன்**—ஆற்றாமை யறிவித்தல்.

# தழுவுதொடரும், தழாத்தொடரும்

[வித்துவான் ஞா. தேவநேயப் பாவாணர்]

*வேற்றுமை யைம்முத லாறு மல்வழி*
*தொழில்பண் புவமை யும்மை யன்மொழி*
*எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி*
*தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.*

இதன் உரையில், வை. மு. சடகோபராமாநுஜாசாரியாரும், சே. கிருஷ்ணமாசாரியாரும்,

"இவை தழுவுதொடர் எனவே, அவ்விருவழியினும், தழாத்தொடரும் சில உள என்றாராயிற்று. 'நீர்க்குடம்' என்பது நீரையுடைய குடம் என விரிதலால், நீர் என்பது உடைய என்பதைத் தழுவிக் குடம் என்பதைப் பொருளால் தழுவாமல் தொடர்ந்ததனால், இது தழாத்தொடராகிய வேற்றுமைத் தொகை .................. 'மரத்தைச் சாத்தன் வெட்டினான்' என்பதில், மரத்தை என்பது வெட்டினான் என்பதைத் தழுவிச் சாத்தன் என்பதைப் பொருளால் தழுவாமல் தொடர்ந்ததனால், இது தழாத் தொடராகிய வேற்றுமை விரி. "சுரையாழ அம்மி மிதப்ப" என்பது சுரைமிதப்ப அம்மி ஆழ எனக் கூட்டப்படுதலால், சுரை என்பது ஆழ என்பதையும் அம்மி என்பது மிதப்ப என்பதையும் பொருளால் தழுவாமல் தொடர்ந்தன. இவை தழாத்தொடராகிய அல்வழிப்புணர்ச்சி. தழாத்தொடராவது நிலைமொழியானது வருமொழியோடு பொருட் பொருத்தமுறத் தழுவாத தொடர். பொருட் பொருத்தமுறத் தழுவிய தொடர் தழுவு தொடர்" எனக் கூறியுள்ளனர்.

தழுவு தொடர், தழாத்தொடர் என்பன இலக்கணப் பொருத்தமுறத் தழுவுகின்ற தொடர், இலக்கணப் பொருத்தமுறத் தழுவாத தொடர் என்றே பொருள்படு மன்றி, பொருட் பொருத்தமுறத் தழுவுகின்ற தொடர், பொருட் பொருத்தமுறத் தழுவாத தொடர் என்று பொருள்படா.

சூத்திரத்துட் கூறப்பட்ட பதினான்கு தொடர்களுள், முதற் பதின்மூன்றும் தழுவுதொடரும், கடையொன்றும் தழாத்தொடருமாகும் என்பதைக் குறித்தற்கே, அடுக்குத் தொடர்க்குமுன் தழுவுதொடர் என்பதைக் கூறிப் பிரித்தனர். ஏனைப் பதின்மூன்றும் தழுவுதொடர் எனவே, இறுதியொன்றும் அதற்கெதிராகிய தழாத்தொடரென்பது அறியப்படும், மெய்ம் மயக்குச் சூத்திரத்தில் ஒன்றை உடனிலை என்ற

தினால், இன்னொன்று வேற்றுநிலையென் றறியப்பட்டாற்போல. இது சூத்திர மாதலின் சொற்சுருங்கற்கு இங்ஙனம் யாக்கப் பட்டது.

வேற்றுமைத்தொகை முதலிய ஆறு தொகைகளும், எழுவாய்த்தொடர் முதலிய எட்டுத் தொடர்களும், நிலைமொழியும் வருமொழியும் இலக்கணத்திற் சம்பந்தப்பட்டிருப்பதும், அடுக்குத்தொடர் ஒன்றுமட்டும் சம்பந்தப்படாது நிலைமொழி வருமொழிகள் தனித்தனி நிற்பதும் உதாரணவாயிலாய்க் கண்டுகொள்க.

(உம்.) சோறுண்டான்—வேற்றுமைத்தொகை } தழுவு
இராமன் வந்தான்—எழுவாய்த்தொடர் } தொடர்
பாம்பு பாம்பு—தழாத்தொடர்

நீர்க்குடம் என்பது நீரையுடைய குடம் என்று விரியும் போது, நீரை என்பது உடைய என்பதையும், உடைய என்பது குடம் என்பதையும் தழுவுகின்றமை காண்க. நீர்க்குடம் என்று தொகையாய் நிற்கும்போதும், நீர் என்பது (தொக்கு நிற்கும்) உடைய என்னுஞ் சொல்லையே அவாய் நிலையால் தழுவும். அல்லாக்கால், வந்தேன் என்னும் தொகை வாக்கியத்தில் நான் என்னும் எழுவாய் அவாய்நிலையால் வருவிக்கப்படாமை காண்க. சாத்தன் மரத்தை வெட்டினான் என்பதே இயல்பான தமிழுரை முறையாதலின், மரத்தைச்சாத்தன் என்பது ஒரு பயன் நோக்கிய முறை மாற்றுரும். சாத்தன் மரத்தை என்பதில் சாத்தன் என்பது எழுவாயும், மரத்தை என்பது எழுவாயின் தொழிலை யடைகின்ற செயப்படு பொருளாயும் எங்ஙனம் இயையுமோ, அங்ஙனமே மரத்தைச் சாத்தன் என்பதிலும் இயையும்.

வந்த சாத்தன் மகன் என்னுந்தொடரில் வந்த என்பது மகனைத் தழுவுமாயின், அஃது இடைப்பிறவரல் எனப் பொதுவியலில் வேறிலக்கணமாகக் கூறப்படுதலின் ஈண்டைக்கேலாதாகும். ஏற்பின், பொதுவியலின் கூறும் இடைப்பிறவரல் கூறியது கூறலாய்க் குற்றந்தங்கும்.

'சுரை யாழ அம்மி மிதப்ப' என்பது செய்யுட்குரிய மொழிமாற்றுப் பொருட்கோளாதலின், அதுவும் ஈண்டைக் கேலாது.

ஆங்கிலத்திலும் தழுவுதொடர் தழாத்தொடர்கட்கு இலக்கணப்பொருத்த முண்மை யின்மைகளையே இலக்கணமாகக் கொள்வர்.

Compound words (தொடர்மொழிகள்) are subdivided into two classes :—

I. Unrelated (தழாத்தொடர்) or those in which the simple words are not connected together by any grammatical relation. (These have been also called Juxta-positional.)

II. Related, (தழுவுதொடர்) or those in which there is some grammatical relation between the component words. (These have been also called syntactical.)

—Nesfield : Book IV.

பதினான்கு தொடர்களிலும் தழுவுதொடரும் தழாத் தொடரும் உண்டென்று நன்னூலார் கொண்டிருப்பின், அதை ஒரு தனிச் சூத்திரத்தில் விளங்கவைத் திருப்பாரே யன்றி, இத்துணை உய்த்துணர்விற்கும் மயக்கத்திற்கும் இடந் தந்திரார் என்க.

---

## கம்பரும் வள்ளுவரும்

[காரை நகர் திரு. சு. அருளம்பலம் அவர்கள்]

(சிலம்பு கச: பரல் கஉ: ௫சஙு-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### அரசியல்

தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமபிரானுக்கு முடிபுனைய எண்ணி உரைதெரிகணிதரை ஒருங்குநோக்கி 'வடிமழுவாள வற் கடந்த மைந்தற்கு முடிபுனை முதன்மைநாண் மொழிமின்' என்று வினவ, அச்சோதிடர்களும் நல்லநாளை ஆராய்ந்து 'உம் புதல்வற்குப் பொருந்துநாள் நாளை' என்றலும் அவர் மிக மகிழ்ந்து வசிட்டரை வரவழைத்து 'நல்லியன் மங்கல நாளும் நாளையாதலின் இன்று இராமனுக்குச் செய்யவேண்டிய விரதம் முதலாயவற்றை ஒல்லையினியற்றி நல்லுறுதி வாய்மையும் பெரிதும் சொல்லுதி' என்று வசிட்டரை வேண்ட, அவர் இராச்சியத்தை நடத்தவேண்டிய முறையை ஸ்ரீராமபிரானுக்குக் கூறிய முறையாக இராமாவதாரத்தில் அரசியல் அமைந் துள்ளது. இவ்வரசியன் முறையோடு திருவள்ளுவர் கூறிய அரசியல் ஒப்புமை யுடைத்தாயிருத்தலைக் காட்டுதும்.

வசிட்டர் உவகை நிரம்பியவராய் மனுகுலநாயகனாகிய ஸ்ரீராமனை நோக்கி, "போர்வலாய்! நினக்குப் புல்கு காதற்புர

வலன் நானிலத்தை நாளை நல்கும்" என்று கூறிப் பின்னும் "நான் கூறவேண்டிய உறுதிப்பொருள் ஒன்று உண்டு" அதனை நன்றுகேட்டு நன்கு கடைப்பிடி என்று ஸ்ரீராமபிரானுக்கு அரசியன் முறைகூறத்தொடங்கி முதற்கண் அரசியல் நடாத்தற்கு அருந்துணையாகிய அந்தணரைப் பேணுமாறு கூறுகின்றார்.

"கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்ினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்"

என்று, 'திருமால், பரமசிவன், பிரமன், உலகம், சத்தியம் முதலாய அனைத்தினும் உயர்ந்தோர் அந்தணர். அவரை இன்றியமையாதது உலகமாதலின் அவ்வந்தணரைப் பேணுதல் உலகினைக் காப்பாற்றுகின்ற அரசர்க்கு உரிய கடமையாகும்' என்று கூறி,

"அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரி
னொந்து ளாரையு நொய்துயர்ந் தாரையு
மைந்த வெண்ண வரம்பு முண்டாங் கொலோ'

என்று, அந்தணாளர் முனிவினால் தேவர்களில் துன்புற்றோரையும், அவர் அருளினால் மேனிலையடைந்து இன்புற்றோரையும் கூறி,

"அனைய ராதலி னையவிவ் வெய்யதீ
வினையி னீங்கிய மேலவர் தாளினைப்
புனையுஞ் சென்னியை யாய்ப்புகழ்ந் தேத்துதி
யினிய கூறிநின் றேயின செய்தியால்"

"ஆவ தற்கு மழிவதற் கும்மவ
ரேவ நிற்கும் விதியுமென் றாலினி
யாவ தெப்பொரு ளிம்மையு மம்மையுந்
தேவ ரைப்பர வுந்துணை சேர்த்ததே"

என்று அவர் வலிமை கூறுவாராய் அவர் ஏவலின்படி விதி நிற்பதால் அவ்வந்தணரைக் காட்டிலும் சிறந்த பொருள் பிறிதொன்றின்மையின் அவர் தாளிணைப் புனையுஞ் சென்னியைப் புகழ்ந்தேத்தி அவர் துணையைக் கொள்ளுதல் அரசியல் நடத்துவார்க்கு இன்றியமையாத முறைமையாகும் என்று வசிட்டர் இராமபிரானுக்குக் கூறினார்.

இவ்வாறு அந்தணரை அரசர் பேணுவதாகிய முறையை வள்ளுவரும் பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரத்தாற் கூறினார். இஃது பெரியார் என்பதற்குத் 'தீநெறி

விலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையார் என்றும், அப்பேரறி வுடையராவார் அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர் என்றும் வரும் பரிமேலழகர் உரையான் அறியலாகும். பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரத்துள் அரசர் அந்தணரைப் பேணல்வேண்டும் என்பதனை வள்ளுவரும்

> "உற்றநோய் நீக்கி யுறாமை முற்காக்கும்
> பெற்றியார்ப் பேணிக் கொளல்"

என்னும் குறளிற் கூறினர். இதன் உரையிலே "உற்ற நோய் நீக்கி" என்பதற்குத் 'தெய்வத்தானும் மக்களானும் தனக்கு வந்த துன்பங்களை நீக்குமாறறிந்து நீக்கி' என்றும், "உறா அமை முற்காக்கும் பெற்றியார்" என்பதற்குப் 'பின் அப்பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையுடை அமைச்சரும் புரோகிதரும்' என்றும் வரும் பகுதியானும் அறியலாகும்.

அந்தணாளர் முனிவினால் தேவரில் நொந்துளார் நகுஷன், இந்திரன் முதலாயினர். இந்திர பதவிபெற்றுச் செல்லுகின்ற நகுஷன் அகத்திய முனிவர் சாபத்தினால் மலைப்பாம்பாயினமையும், இந்திரன் துருவாச முனிவர் சாபத்தினால் தன் பதமிழந்து தாமரைத் தண்டினுள்ளே ஒளித்திருந்ததுமாகிய கதைகள் இங்கு அறியத்தக்கன. நகுஷன் தன் பதமிழந்த கதையினை வள்ளுவரும்,

> "எந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
> வேந்தனும் வேந்து கெடும்"

என்னுங் குறளிற் கூறினர். இதன் உரையில், "நகுடனென்பான் இந்திரன்பதம் பெற்றுச்செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழைசெய அதனாற் சாபமெய்தி அப்பத மிடையே இழந்தானென்பதனை யுட்கொண்டு இவ்வாறு கூறினர்" என்று பரிமேலழகர் இக்கதையைக் குறிப்பிட்டமை காண்க.

அந்தணரை அரசர் பேணிப் போற்றுவதாகிய ஒழுக்கம் பண்டைக்காலத்துள தென்பது

> "இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
> நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே" (புறம்)

எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பணித்தமையானும்,

"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே" (பதிற்றுப்பத்து)
எனச் சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதனைக் கபிலர் பணித்தமையானும் அறியப்படும்.

"ஆவ தற்கு மழிவதற் கும்மவ
ரேவ நிற்கும் விதி"

என்று விதியே ஆக்க வழிவுகளுக்குக் காரணமாகும் என்று கம்பர் கூறியமையை வள்ளுவரும்,

"ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி"

என்னுங் குறளிற் குறிப்பிட்டார்.

இன்னும் வசிட்டர் ஸ்ரீராமபிரானை நோக்கி அறமும், நீதியும், அருளும் முதலாகிய உயரிய குணங்களைத் தவறாது கைக்கொண்டு நடப்பாயாக;

"உருளு நேமியு மொண்கவ ரெஃகமு
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்குந்
தெருளு நல்லற மும்மனச் செம்மையு
மருளு நீத்தபி னவதுண் டாகுமோ"

என்று கூறினர். இவ்வாறே வள்ளுவரும்,

அறத்தினை,

"அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு"

"இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு"

"பெருங்கொடையான் பேணான் வெகுளியவனின்
மருங்குடையார் மாநிலத் தில்"

என்னுங் குறள்களினாலும்,

மனச்செம்மை (நீதி)யை,

"அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு"

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"

"மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி"

என்னுங் குறள்களினாலும்,

அருளினை,

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்"

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு"

"துளியின்மை ஞாலத்திற் கொற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு"

என்னுங் குறள்களினாலும் கூறினார்.

கம்பர்,

"தெருளு நல்லறமும் மனச்செம்மையும் அருளும்"
எனக்கூறிய முறையாக வள்ளுவரும் இறைமாட்சி

என்னும் அதிகாரத்துள்,

கோடை யளி செங்கோல் குடியோம்ப னான்கும்
உடையனாம் வேந்தர்க் கொளி.

என்னுங் குறளினால் அறத்தைக் கொடை என்பதனாலும் மனச்செம்மையைச் செங்கோல் என்பதனாலும் அருளைக் குடியோம்பல் என்பதனாலும் கூறினார்.

அறம், மனச்செம்மை, அருள் முதலாய குணங்கள் அரசர்க் கின்றியமையாத குணங்களாதலை.

"மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறம்)

என்றும்,

"மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தினீடும் என்னெறி"—(பெரிய புராணம்.)

என்றும்,

"முறை வேண்டுநர்க்குங் குறை வேண்டு நர்க்கும்
வேண்டிய வேண்டிய வேண்டினர்க் கருளி
யிடைதெரிந் துணரு மிருடீர் காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்
துரும்பில் கூற்றமோ டிருந்தோற் குறுகி"

—(பெரும்பாண்.)

என்றும் வரும் பகுதிகளான் அறியலாகும். இங்கு, முறைவேண்டுநர்க்குங் குறைவேண்டுநர்க்கும் வேண்டிய வேண்டிய அருளி என்பதனால் அருளும், இடைதெரிந் துணரு மிருடீர் காட்சி என்பதனால் செங்கோன்மையும், வேண்டினர்க்குக் கொடைக்கட னிறுத்த என்பதனால் அறமும் குறிப்பிடப்பட்டமை காண்க.

(தொடரும்)

## தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம்

[திரு.பா. வே. மாணிக்கநாயகர்-திரு. க.ப. சந்தோஷம், B.A.,L.T.]

(சிலம்பு ௧௪: பரல் ௧௧: ௪௭௩-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுகாறும் முகவுரையாகக் கூறியவை நிறுத்தித் தமிழ் எழுத்துக்களும் அவற்றின் நுண்மை விளக்கமும் என்ற பொருளை எடுத்துக்கொள்ளுகிறேன். தமிழ்மொழியிலே மறைத்தன்மையவாகிய பகுதிகள் நிரம்பிக் கிடக்கின்றன. மறைத்தன்மையவாகிய இப்பகுதிகளைத் தமிழ் இலக்கியத்திலிருந்து நீக்கிவிடுவோமாயின், இக்காலத் தெழுதப்படுகின்ற நாவல்களைத்தவிர வேறொன்றும் எஞ்சாது. முப்பது நாற்பதியாண்டுகளுக்குமுன் மொழியின் தோற்றத்தையும் பயனையும் பற்றிப் பல்வேறு கருத்துக்களிருந்தில. ஒரே ஒரு கருத்துத்தானிருந்தது. அக்கருத்தென்னவெனின், தொடங்கற்கண் சிவபிரான் அகத்தியருக்கு மொழியையளித்தார்; அகத்தியர் அதைத் தென்னிந்தியாவிலுள்ள மக்களுக்கீந்தார்; அதன் பயன் கடவுளையடைவதே என்பதாம். இதைத் திருவள்ளுவர் தமது குறளில் வற்புறுத்துகின்றார்:—

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா ரெனின்.
ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவர்க்
கெழுமையு மேமாப் புடைத்து.
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

இக்காலத்து உலோகாயதக் கொள்கையினர் மொழியைப் பற்றிய இக்கருத்து அறியாமையின் பாற்படுமென்று இகழ்ந்துரைப்பர்.

இக்காலத்தில் மொழியைப்பற்றித் தமது கருத்தை வெளியிடுகின்ற பழைமை யாராய்ச்சிக்காரர், கல்வெட்டுக்களையும் நாணயங்களையும் ஆராய்பவர், மக்கட் பகுப்பை ஆராய்பவர், முன்னிருந்து மாண்ட உயிர் வகைகளை ஆராய்பவர் ஆகிய பலரும் காரணமின்றி ஒன்றையும் ஏற்றுக்கொள்ள இசைகின்

றிலர். பொது அறிவிற் குடன்பட்டதையே அவர்கள் காணக் கூடியவர்களாதலின், நமது நாட்டுப் பழைய ஆசிரியர்கள் நுட்ப அறிவினுற் கண்டவற்றை இவர்கள் மதியார். பொது அறிவென்பது இத்தன்மையதென்று வரையறுக்கப்பட்ட தொன்றன்று; அது காலத்திற்கு மிடத்திற்கு மேற்றவாறு மாறுந்தன்மையது; வெவ்வேறு மக்களில் வெவ்வேறு அள வுடையதாயிருப்பது; ஒரு மகனே ஒரு பொழுதில் சிறந்த அறிவுடையவனுகவும், மற்றொரு பொழுதில் குறைந்த அறிவு டையவனுகவும் விளங்கலாம். முன்னிருந்த ஆசிரியர்கள் மொழியைப்பற்றி ஒரே கருத்துடையவராயிருந்தனர். இப் பொழுது மொழிகளை யொட்டிய பத்து ஆராய்ச்சித்துறை களிருந்தால் இவ்வாராய்ச்சித் துறையிலுள்ளவர்கள் மொழி யின் தோற்றத்தைப்பற்றிப் பதிற்றுப்பத்துக் கருத்துடைய வர்களாயிருக்கிறார்கள். சமஸ்கிருத ஆராய்ச்சியாளர் சமஸ் கிருதத்திலிருந்தே எல்லாந்தோன்றின வென்பர்; கீழ்நாட் டார், எல்லாம் கிழக்கிலிருந்தே பிறந்தனவென்பர்; கிறிஸ் தவர்கள் பழைய பாபிலன் நாடே எல்லாவற்றிற்குந் தோற்று வாயென்பர்; இந்துக்கள் குருக்ஷேத்திரத்தை யாவற்றிற்குந் தாயகமாக்குவர்; என்னைப்போன்ற தமிழர்கள் யாவுந் தமிழி லிருந்துந் தென்னிந்தியாவிலிருந்துமே வந்தன வென்பர்.

இங்ஙனங் கூறப்படுகின்றன வெல்லாம் ஒக்க உண்மை யாயிருத்தல் கூடாது; எல்லாந் தவறாயிருக்கலாம். மொழி இறைவனிடத்திருந்து வந்ததென்ற கொள்கை பன்னெடுங் காலம் எதிர்ப்பின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டது. தக்கவை எஞ் சும் மற்றவை அழியும் என்ற கொள்கையைப் பின்பற்று கின்ற இக்காலத்து ஆராய்ச்சியாளர் மேற்குறித்த கொள்கை மிக நீண்டகாலம் மக்களுளத்தில் ஆட்சிபெற்றதற்குத் தகுந்த காரணங்கள் இருக்க வேண்டுமென்பதை ஒத்துக்கொள்ள வேண்டும். அக்கொள்கை அறியாமையாற் பிறந்ததென்பது ஒவ்வாது. வானநூல், இசை, மருந்து, உண்மைநூல், இலக்க ணம் முதலியவற்றை நன்கறிந்த நம்முடைய பண்டைப் புலவர் கள் மொழி என்ற இவ்வொரு பகுதியில் மாத்திரம் அறியா மைக்காளானார்கள் என்பது பொருந்துவதொன்றன்று.

மொழி என்பது மக்களை இறைவனிடத்துச் செலுத்துங் கருவி என்ற கொள்கையைப் புறக்கணித் தொதுக்குகின்ற இக்காலத்துப் புலவர் பண்டைக்காலத்துக் கருத்துக்களில் இது பதர், இது மணி என்பதை ஆராய்ந்திருக்கவேண்டும் இவ்வாறவர்கள் செய்யாது முழுவதையும் அவர்கள் இகழ்ந் துரையாடுகின்றனர்,

மொழியைப்பற்றி முன்னோர் கூறியத னுண்மையைக் கண்டு பிடிப்பது முப்பதியாண்டு எனது வேலையாயிருந்தது. அதை முற்றும் யான் கண்டுவிட்டேனென்று சொல்லொணுதாயினும் இத்துறையில் இன்னுமாராய்ச்சி செய்யுந் திறமையுடையவர்க்குப் பயன்படக்கூடியவற்றைத் தொகுத்து வைத்திருக்கின்றேன். கணக்கு முதலிய மற்ற அறிவுத்துறைகளைப் போலவே இத்துறையும் வளருந்தன்மையது. ஆகவே, இதன் எளியவான பகுதிகளைக் கூருது நுட்பமானவற்றிற்குச் செல்லுதலியலாது. ஈண்டுக் குழுமியிருக்குங் கற்ருேரவையில் இத்துறையின் எளியனவற்றையே யான் எடுத்துரைத்தல் கூடும்.

எழுத்துக்களைப்பற்றிப் பொது முறையிலாவது, நுட்பமுறையிலாவது பேசுதற்கு அவற்றின் இயலை இரண்டாக வகுத்தல்வேண்டும். இவைஒலியியல் வடிவியல் என்பனவாம். இன்று எழுத்துக்களின் வடிவமைதியைப் பற்றிச் சில படங்கள் காட்ட விரும்புகின்றேனுதலின், ஒலியியலைப்பற்றி விரிவாய்க் கூறுதற்கில்லை. தமிழ் எழுத்துக்களின் ஒலி அல்லது உச்சரிப்பு எங்ஙனமிருக்க வேண்டுமென்று பழைய தொல்காப்பிய முதல் நேற்றுத்தோன்றிய சிறு நூல் வரையிலுள்ள எல்லா இலக்கணங்களாலும், மிக நுட்பமாகவும் அறிவியலுக்கொத்த வகையிலும் கூறப்பட்டிருக்கின்றது. இந்த விதிகள் இக்காலத்திற்குப் பொருந்தாவென்று தள்ளப்படவில்லை. என்ருலும், மகாமகோபாத்தியாயர் முதல் பேர்பெரிய திண்ணைச் சட்டம்பியார் வரையில் எல்லோரும் இவ்வெழுத்துக்களின் ஒலியைத்தவருக எழுப்புவதிற் பிடிவாதமாயிருக்கிருர்கள். தமிழ் எழுத்துக்களின் செவ்விய ஒலி இம்மாகாணத்திலுள்ள கல்வியில்லாதவரென்று கருதப்படுகின்ற தமிழ் மக்களிடத்தும், இலங்கைத் தீவின் வடபகுதியிலுள்ள படித்த தமிழரிடத்துங் கேட்கப்படுகின்றது.

இப்பொழுது தமிழகராதி தொகுப்பதற்குக் கூட்டப்பட்ட குழுவினர், தாங்கள் தொகுக்கப் போகின்ற அகராதியில் தமிழ் எழுத்துக்களின் தவருன உச்சரிப்பைச் சரி என்று பதிவு செய்யப்போவதால் அறிவியல் முறைக்கொத்த வகையில் திருத்தமாக வகுக்கப்பட்ட தமிழ் ஒலியியலுக்குக் கல்வி இல்லாதவரைக் காட்டிலும் பெருங்கேடு விளைப்பா ரென்பது திண்ணம். தமிழ்ச் சொற்களின் உச்சரிப்பை ஆங்கிலவெழுத்தில் தவருக அமைத்துக்காட்டாது விட்டுவிடுவாராயின் அதுவே அவர்கள் தமிழுக்குச் செய்யுமோர் உதவியாகும். தவருன உச்சரிப்பைத் தக்கதென்று அகராதியிற் காட்டல் தமிழ்மொழியின் அடிப்படையை, உண்மை என்ற அதன்

அஸ்திபாரத்தைத் தாக்குவதாகும். (சென்னைச் சர்வ கலா சாலையாரால் நீண்டகாலந் தொகுக்கப்பட்டு அண்மையில் முற்றுப் பெற்ற தமிழகராதியில் தமிழ்ச் சொற்களை ஆங்கிலத்தில் எழுதிக் காட்டியிருப்பது இழுக்குடைத் தென்பதை அப் பெரிய அகராதியின் ஒரு பகுதியைப் பார்த்த எவருந் தெற்றெனக்காணலாம். இதுகுறித்து மாணிக்கநாயக்கர் சொல்வது ஒருபுறமிருக்க, இந்த மாதத் தொடக்கத்தில் (ஆகஸ்டு. 9) வெளிவந்த 'இந்து'ப்பத்திரிகை ஞாயிற்றுக்கிழமைப் பதிப்பில் திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரவர்கள் தமிழகராதியில் தமிழ்ச்சொற்களை ஆங்கில எழுத்தில் பெயர்த்துக் காட்டியிருப்பதன் குறைகளை எடுத்துரைத்துளார்.) தமிழ் எழுத்துக்கள் உண்மை இயலை அடிப்படையாகக் கொண்டவை. தமிழ் இலக்கணங்களில் வகுக்கப்பட்டிருக்கும் ஒலிபியல் அறிவியல்முறையைத் தழுவியது. இம்முறையில் வகுக்கப்பட்ட அவ்வொலியியலை நாம் வழங்குவோமாயின் உலகிலுள்ள எம்மொழியையுந் தமிழில் (வேறு எழுத்துக்களைக் கடன் வாங்காமல்) வரைவதற்குப் போதிய எழுத்துக்களிருக்கின்றன. இதைவிட எளியதுந் திருந்தியதுமான முறையொன்று கருதற்கரிது. தமிழ் ஒலி முறையின் இயலையும் அஃது எவ்வொலியையும் வரைந்துகாட்டுந் திறமையுடையது என்பதையும் உவெஸ்லி கலாசாலைக் கூட்டத்தில் 1917-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 23-ம் தேதி நிகழ்த்திய சொற்பொழிவில் விளக்கியுள்ளேன். நமதருமைத்தமிழ் மொழியின் பொருட்டு இத்துறையில் ஆர்வத்துடன் ஆராய்வதற்கு எளியேன் என்றும் என்னாலியன்ற உதவியைச் செய்யக் காத்திருக்கின்றேன்.

---

## நுரைநாட்டியம்

வழக்காற்றில் "நொர நாட்டியம்" என்று ஒரு சொல் தமிழ் நாட்டில் இருந்து வருகிறது. அதுவே "நுரைநாட்டியம்" என்பதாம். ஒருவன் ஒரு நொடிப்பொழுதுகூட ஓரிடத்தில் நில்லாமல் அங்குமிங்கும் ஓடியாடிக் குதித்துக்கொண்டிருப்பானாயின் "என்னடா, நுரைநாட்டியம் பழகுகிறாய்" என்று கூறுவதுண்டு. ஒரு பொருளை விரும்பி அழுங்கால் குழந்தைகள் இவ்வாறு நுரைநாட்டியம் பழகுவது இயல்பு. ஓடும் நீர்ப்பரப்பின்மீது நீர்க்குமிழிகள் சற்றும் ஓயாது அலைதருவதைக் கண்டவர்கள் இச்சொல்லின் வியத்தகு உவமைச் சிறப்பை நன்கறிவார்கள். (நுரை + நாட்டியம் = நுரைநாட்டியம்)

(காழி. சிவ. க.)




## சிவஞானபோதக் கருத்து

### ஆறாவது சூத்திரம்

[திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளை B. A. அவர்கள்]



(சிலம்பு 14: பரல் 12: பக்கம் ருருஎ-ன் தொடர்ச்சி.)

[ருருஎ-ம் பக்கத்திற் கூறப்பட்ட 21-ம் பந்தியை அடித்து விட்டு அதற்குப் பதிலாக அடியிற் கண்டவற்றை 21-ம் பந்தியாகக் கொள்க.]

21. இச்சூத்திரம் இரண்டு அதிகரணங்களை யுடையது. அவற்றுள் சூத்திரத்திலுள்ளபடி "உணருரு எனின் அசத்து உணராது எனின் இன்மை" என்று முதல் அதிகரணம் இருத்தல் வேண்டும். இவ்வதிகரணத்தில் "உணருரு எனின் அசத்து" என்றும் "உணராது எனின் இன்மை" என்றும் இரண்டு பகுதிகளுள.

இரண்டாவது பகுதியாகிய "உணராது எனின் இன்மை" அதாவது, முதல்வன் உணரப்படாத இயல்புடையவன் என்றால் சூனியப்பொருளாம் என்பது எல்லாச் சமயத்தாரும் ஒத்துக்கொள்ளு முண்மை யாதலின், அதுபற்றி ஆசங்கை யில்லை. ஆதலின், ஆசிரியர் அப்பகுதியினை விடுத்து உணருரு எனின் அசத்து என்பதை முதல் அதிகரணமாக வைத்துக் கூறினர். இவ்வாறு ஆசிரியர் கூறுதுவிடுத்த இரண்டாவது பகுதியை வழிநூலாசிரியர் மந்த உணர்வுடையார்க்கு "உணரப்படாத முதற்பொருள் சூனியமோ அன்றோ" என்னும் ஆசங்கை (ஐயப்பாடு) நிகழாமைப்பொருட்டு தமது சித்தியார் நூலில் மூன்றாவது அதிகரணமாக வைத்துச் சுட்டறிவினால் அறியப்படாத பொருளும் சூனியப்பொருளும் அல்லாத முதற்பொருளை "அநிர்வசனீயம்" என்றுகூறும் மாயாவாதியை மறுத்துரைக்கின்றார். இருதிறனல்லது சிவசத்தாம் என்னும் இரண்டாவது அதிகரணத்தை வழிநூலாசிரியர் முதனூலாசிரியர் கூறியவாறே கூறுகின்றார். இந்த இரண்டு அதிகரணங்களும் முறையே பின்னர்க் கூறப்படும்.

## முதல் அதிகரணம்

22. மேலே அஞ்சாவது சூத்திரத்தில், உயிரானது மனம் ஐம்பொறிகளால் தன்னையும் தன்னைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறியமாட்டாது என்று ஆசிரியர் கூறிய தனை உடன்படாது, உலகம்போல் முதல்வனும் அளவை அறிவால் அறியப்படும் பொருளாம் என்று கூறும் நையாயிகர் முதலாயினோரையும், சற்காரிய வாதப்படி எல்லாப் பொருள்களும் சத்தேயாகலின் அளவை அறிவால் அறியப் படும் பொருளாகிய உலகமும் சத்தேயாம் என்று கூறும் சாங்கியரையும் மறுத்து மாணவர்க்கு ஐயப்பாடு நிகழாமல் சைவசித்தாந்த உண்மையை அறிவுறுத்தும்பொருட்டு ஆசிரியர் இந்த முதலதிகரணத்தைக் கூறுவான் தொடங்குகின்றார்.

23. ஆசிரியர் முதற்கண் "ஈண்டு அறிவி லறியப்பட்ட சுட்டு அசத்து" என்பதனை மேற்கோளாகக் கூறுகின்றார். ஈண்டு என்பது இவ்வதிகரணத்தில்; அறிவு என்பது ஒன்றை முந்தி அதுவதுவாக உலகத்தார் காணும் கருவிகளோடு கூடிய அளவை அறிவு. புடைநூலாசிரியர் சிவப்பிரகாசம் 56-வது பாட்டில் "அறிவுதானொன்றை முந்தி யதுவதுவாகக் காணுமறிவு காண்" என்று கூறியது காண்க. முதல்வன் மெய்யறிவினால் (சிவஞானத்தால்) அறியப்படுதலின் அதனின்று நீக்கி அறிவதற்கு ஆசிரியர் 'அறிவினால்' என்றார். சுட்டு என்பது ஆகுபெயராய்ச் சுட்டி யறியப்படும் பொருளைக் குறிக்கிறது. மனதினாற் கருதி அளவை அறிவினாற் சுட்டி அறியப்படும் பொருள்களாகிய உலகம் அசத்து என்பது மேற்கோளினாற் போந்த பொருளாகும். இங்ஙனம் முதற்கண் ஆசிரியர் அசத்துப் பொருளின் இலக்கணங் கூறினார்.

24. உலகத்தை அசத்துப் பொருள் என அறிந்த ஒருவனே பின்னர் உலகம் அசத்துப் பொருளாயின், அவ்வசத்தினின்று நீங்கிய சத்துப்பொருள் யாதென நாடி அதனைத்தேடி அடைய முயல்வன். ஆதலின், ஆசிரியர் முதற்கண் மாணவர்க்கு உலகத்தின் அசத்துத்தன்மையைக் கூறினார். ஒருவன் அசத்தாகிய உலகின் நிலையாமையை உலக வாழ்வு அநுபவத்தின் பயனாக அறிந்து, பின் அந்நிலையாமையின்றி யென்று மொருதன்மைத்தா யுள்ள சத்தாகிய சிவத்தை அடைய விரும்பி, அதனைத் தேட முயல்வான். வீடு பேற்றைக் காரண வகையாலே, துறவற வியலிற் கூறவந்த ஆசிரியர் திருவள்ளுவர், வீடு பயக்கு மெய்யுணர்தலுக்குக் காரணமாகத் தமது திருக்குறள் நூலில் முதற்கண் நிலையாமை

யைக் கூறிய கருத்தை நோக்குக. இதுபற்றியன்றே மனவாசகங் கடந்தார் தமது உண்மை விளக்கம் என்னும் நூலில் "போய்காட்டிப் போய்யகற்றிப் போதாந்தப் பொருளாம்—மெய் காட்டு மெய் கண்டாய்" என்று தமது ஞானாசிரியரை விளித்துக் கூறினர். உலகினைச் சுட்டி அறியும் ஆராய்ச்சி அறிவே சிவத்தைச் சுட்டிறந்தறியும் மெய்யறிவுக்கு வழியாகும் என்பது கருத்து. மாணிக்கவாசக அடிகளும் தமது திருவாசக நூலில் வீடுபேற்றிற்கு வழியாகச் சுட்டறிவு ஒழித்தலைத் திருவேசறவு என்ற பதிகத்திற் கூறியருளியதூஉங் காண்க.

25. ஆசிரியர் கூறின மேற்கோளைக் கேட்ட நையாயிகன் கூறுவதாவது:—அசத்தாவது இல்லை என்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பது. இவ்வாறன்றி 'இது குடம்' 'இது படம்' என்றாற்போல உள்ளது என்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயக்கும் உலகமும் அசத்தேயாயின், சத்து, அசத்து என்னும் பாகுபாடு பெறப்படாது. உலகமானது சுட்டறிவாகிய அளவை அறிவினாலறியப்படுதல் மாத்திரையே பற்றி, அதனை அசத்து என்றல் பொருந்தாது.

26. நையாயிகன் கூறிய தடைஉரை (ஆக்ஷேபனை)யைக் கேட்ட ஆசிரியர் தாம் கூறின மேற்கோளை நிலைநாட்டுதற்காய ஏதுவைக் கூறுகின்றார். அந்த ஏதுவானது "அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் என்பது. இந்த ஏதுவில் அவை என்ற சுட்டுப்பெயர் மேற்கோளிற் கூறப்பட்ட 'சுட்டு' என்பதைக் குறிக்கிறது; அதாவது அளவை அறிவாற் சுட்டி அறியப்படும் பொருள்களை (உலகத்தை)க் குறிக்கிறது. பிரகாசம் என்பது ஒரு பொருளை உண்டு என்றுணருமுணர்வு. அப்பிரகாசம் என்பது ஒரு பொருளை இல்லை என்றுணருமுணர்வு. அச்சொற்களிரண்டுமிங்கே ஆகுபெயர்களாய் அவ்வுணர்வுகள் நிகழ்தற்கு இடமாகிய பொருளின்மேல் நின்றன. அளவை நூலில் உண்டு என்று உணரு முணர்வு உபலத்தி என்றும், இல்லை என்று உணருமுணர்வு அநுபலத்தி என்றுங் கூறப்படும். உலகமானது என்றும் ஒரு நிலையில் நிற்பதன்று; அது தோற்றமும் ஒடுக்கமும் எய்துந் தன்மையுடையது. நான்முகன் இராசத குணகுறிப்பாட்டால் உலகினைப் படைத்தபொழுது அது நம் மனோர்க்கு உண்டு என்று உணருமுணர்வுக்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பதாயுள்ளது. அதே உலகினை உருத்திரன்

தாமதகுண மிகுதிப்பாட்டால் அழித்து ஒடுக்கினபொழுது அது நம்மனோர்க்கு இல்லை என்றுணருமுணர்வுக்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பதாயுள்ளது. உலகம் நிலைத்திருப்ப தாயுள்ள இடைக்காலத்திலும் அதனிடத்துள்ள பொருள் களும் அடிக்கடி தோன்றியும் அழிந்தும் வருகின்றன. இங் ஙனம் உலகப்பொருள்கள் என்றும் ஒருதன்மைத்தாயிராமல் நிலைமாறிவரும் பெற்றியை உடையனவாயிருத்தல்பற்றியே அவை ஒரு காலத்தில் உண்டு என்றுணருமுணர்வுக்கு விடயங் களாய் நின்றே பிறிதொரு காலத்தில் இல்லை என்று உணரு முணர்வுக்கும் விடயங்களாய் நிற்கின்றமையால் அவை அசத்து என்று கூறப்பட்டன. இவ்வாறன்றி அவை நம்மனோர்க்கு உண்டு என்னு முணர்விற்கு விடயங்களாயிருக்குங்கால் இல்லை (do not exist) என்பது பொருளன்று. அசத்து என்ற சொல்லுக்கு உண்டு (existence) என்ற சொல்லுக்கு மறுதலையான இல்லை (non-existence) என்று நீ பொருள் கொண்டதால் மயங்கிக் கூறினாய். சைவசித்தாந்த உண்மைப் படி பொருட்டன்மையின் வேறாய் இல்லை என்பதொன்றில்லை என்பதும், பதிபசுபாசப் பொருள்கள் மூன்றும் அநாதிநித்திய சத்துப்பொருள்களேயாம் என்பதும் நீ அறிவாயாக.

27. ஆசிரியர் கூறின விடை உரையைக் கேட்ட நையா யிகன் பின்னுங் கூறுகின்றதாவது:—உலகம் அசத்து என்ப தற்கு நீர் கூறியது ஒருவாறு பொருந்தும். ஒருசாரன அங் ஙனமாயினும் அளவை அறிவால் அறியப்பட்டனவெல்லாம் அசத்தாமென்றல் பொருந்தாது. அவ்வாறு கூறுவதற்குப் பிரமாணமில்லை. அன்றியும் அளவை அறிவால் அறியப்பட் டனவெல்லாம் அசத்து என்னும் ஏதுபற்றி முதல்வன் அளவை அறிவால் அறியப்படான் என்பது பொருந்தாது. 'அங்ஙனம் நீர் கூறுதல் அருளினாலாகமத்தே அறியலா மளவி னாலுந் தெருளலாம்' என்று வழிநூலாசிரியர் சிவஞான சித்தியார் சுபக்கம் பாயிரத்திற் கூறியதற்கு முரணாகும்.

28. நையாயிகன் கூறின தடை உரையைக் கேட்ட ஆசிரியர் மறுமொழி கூறுகின்றார்:—நையாயிகனே! நீ அசத் தினிலக்கணத்தை நன்கு அறியாத காரணத்தால் நாம் சொன்ன உண்மையை அறியாமல் நீ இங்ஙனம் கூறுகின்றாய்! அளவை அறிவால் சத்தினிலக்கணத்தை அறிதல் முடியாது. மெய் யறிவுடையாரே பதி பசு பாசங்களின் சிறப்பிலக் கணத்தை அறிதல் முடியும் (13-வது பந்தி பார்க்க). மெய் யறிவாகிய அநுபவ அறிவு இல்லாத நீ அளவை அறிவு

கொண்டு சத்தினிலக்கணத்தை அறிய முடியாது. அதனல் அசத்தினிலக்கணத்தையும் நீ நன்கு அறியமுடியாது. 'அருளினு லாகமத்தே அறியலா மளவினுலும் தெருளலா'மென்று வழிநூலாசிரியர் கூறியது மெய்யறிவைத் தோற்றுவித்தற்கு அளவைஅறிவு பயன்படுமென்பது பற்றியே யாகும். அஃது அவர் கருத்தென்பது, அளவினுலுந் தெருளலாம் என்று அவர் அந்தப்பாட்டில் பொதுப்படக் கூறியபின் 'ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே மருளெலா நீங்கக் கண்டு வாழலாம்' என்று சிறப்பாக விதந்து கூறியதனுல் நாம் அறியலாம. இதனை யறியாது நீ அளவினுலுந்தெருளலாமென்று பாட்டில் முதல் வரியிற் கூறப்பட்டதை மாத்திரம் பிரமாணமாக எடுத்துக்கொண்டு நீ கூறுங் கொள்கைக்கு ஆதாரமா மென்றல் சிறிதும் பொருந்தாது. அணுவுக்குள் அணுவாய் உயிர்க்கு உயிராய் அளவு படாமல் எங்கும் நிறைந்திருக்கிற முதல்வனை எங்ஙனம் அளவுபட்ட அளவை அறிவால் அறிய முடியும் என்ற வினவையும் நீ கருதவில்லை. ஆதலினுல் மெய்ஞ்ஞானிகளே முதல்வனை அநுபவ உணர்வாகிய மெய்யுணர்வினுலே தங்கள் சிந்தையுள்ளே கண்டுணரலாமே அன்றி ஏனையோர் தங்கள் அளவை அறிவினு லறியமுடியாது.

இவ்வுண்மை பின்வருகிற உண்மை அதிகாரத்தில் நன்கு கூறப்படும்.

---

## பிரிவாற்றுமை

யாழ்ப்பாணத்துத் தெல்லிப்பழை வழக்கறிஞர் திரு. வ. குமாரசுவாமிப்பிள்ளை அவர்கள் B. A. சென்ற 31-8-36 ல் திடீரென இவ்வுலக வாழ்வை நீத்தது பெரிதும் இரங்கற்பாற்று. பண்டைத் தமிழ் நூலாராய்ச்சியில் கழிபற்றுடைய இப்பெரியார் "தண்டிகைக் கனகராயன் பள்ளு", "கதிரைமலைப் பள்ளு" ஆகியவற்றின் பதிப்பாசிரியராவர்; தண்டிகைக் கனகராயர் வழிவந்தவருமாவர். இறக்குந்தருவாயில் பாசுபதரைப்பற்றி ஆராய்ச்சி செய்துவந்தார்; யாழ்ப்பாண வரலாற்று நூலான கைலாய மாலைக்கு ஆராய்ச்சிக் குறிப்புகள் எழுதிவந்தார். யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் பிணைத்தலைவராக விளங்கிய இப்பெரியாரின் திருமகளார் யாழ்ப்பாணத்து இராமநாதன் கல்லூரித் தமிழ்ப் பண்டிதையாக விளங்குகின்றனர். அவ்வம்மையாரே "1800 ஆண்டுகட்கு முன்னுள்ள தமிழர்" என்ற ஆங்கில ஆராய்ச்சி நூலைத் தமிழில் மொழிபெயர்த்தவராவர். இறந்த பெரியாரின் குடும்பத்தார்க்கு இறைவன் ஆறுதலளிப்பானுக.

# ஆராய்ச்சிப் பகுதி : Research

## " வீரரும் வீரரைப் போற்றலும் "

[திருமதி குண ஜனார்த்தனம், M. A., L. T.]

வீரன் என்பான் யாவன்? வாளோ, வேலோ, அல்லது துப்பாக்கியோ ஏந்திப் போர்க்கோலத்துடன் அமர்க்களம் புக்குப் போரில் சலியாது நிற்பவன் தானே? அன்னேனையே வீரனென எண்ணுகிறோம். அஃது பொருத்தமன்று. போர்க்களம் புகாமலே ஒருவன் வீரனாகத் திகழ்தலியலாதோ? உலகமே போற்றும் நம் காந்தியடிகள் ஒரு பெரும் வீரன்றோ?

வீரமென்பது யாது? அதற்குத்தக்க செயல்களிலே உளதாகும் ஒரு மனத்துணிவு எனப் பொருள்கொள்ளுதல் மிகப்பொருந்தும். போர்த் தொழிலேயன்றி எத்தொழிலேனும் மக்களுள் அடங்குவார்க்கு ஏற்றதேல் அஃது தக்க செயலேயாம். மாக்கள் தொழிலில் உளதாகும் மனத்துணிவு வீரமாகாது.

தக்க தொழிலிலே உளதாகும் மனத்துணிவே வீரமாம். எத்தகைய இடையூறுகள் நேர்ந்த போதிலும் அவற்றைச் சற்றும் பொருட்படுத்தாது, தனக்கு உண்மையெனத் தோன்றியதையே உரமாகக் கடைப்பிடித்துத்தான் ஏற்றுக் கொண்ட வினையை ஆற்றலுடன் செய்துமுடிக்க முனைந்து நிற்கும் ஊக்கமே வீரமாகும்.

உண்மையெனக் கண்டதோர் செயலிலே எத்தகைய இடையூறுகள் நேர்ந்தபோதிலும், பலர் கொன்னே தன்மீது அலர் தூற்றியக்கண்ணும், அவமதித்த ஞான்றும், தனது உயிருக் கினியவரால் அச்செயலுக்காக இகழப்பட நேரினும், தானியற்றுஞ் செய்கை தகுதியுடைத்து, தூய்மையுடைத்து எனத் தெளிந்து செய்துமுடிக்குமொருவனே ஒப்பற்ற ஆண்மகனவன்; சிறந்த வீரனவன்; தான் மேற்கொண்ட செயலிலே வெற்றியுற விளங்கவேண்டு மென்பதில்லை; வீழ்ந்தாலும் வீரனே.

ஓர் உண்மைவீரனிடத்தில் வாய்மை, மனத்தூய்மை, கருணை, பொறுமை, தண்ணளி, மனவலிமை முதலியன

பொருந்தியிருக்கும். வீரனென்பானிடத்தில் வாய்மையென்ப தில்லையேல் அவன் வீரனாகான். அவனுக்கு வாய்மையெனக் காணப்படுவது பிறருக்கும் அப்படியே தோற்றவேண்டு மென்பதில்லை. ஆனால் அவன் தன் அறிவிற்கு உண்மையெனத் தோற்றியதைத் தெற்றெனக் கைப்பற்றல் வேண்டும். தான் கண்ட உண்மைக்கு மாறாக நடப்பவன் ஒருபொழுதும் வீரனாகான்.

ஒருவீரனிடம் ஆணவமென்பதிராது; அவன்பால் கருணையென்னும் அருங்குணம் பொருந்தாநிற்கும். கருணை யில்லாது மனவலியும் உடலுரமும் மாத்திரம் பெற்றிருந்தால் அஃது அமைவதாமோ? காட்டில்வாழ் விலங்குகளுங்கூட அவற்றைப் பெற்றிருக்கின்றன அல்லவோ? மனத்தூய்மை யுடையானிடத்தே கருணை நனிவிளங்கும். கருணை யென்பது வீரனுக் கேற்றதோர் அணிகலமாகும். அதுதான் அவனுக்குப் பெருமையுஞ் சிறப்பையும் பெருக்குகின்றது. கருணையின்றி மனவலிமை பெற்றிருப்பான் கொடியோனாகக் கருதப்படுவானேயொழிய வீரனாகக் கருதப்படமாட்டான் என்பது மிகையாகாது.

தவிர, வீரனாகிய ஒருவன் தன்உடல், பொருள், உயிர் மூன்றையுந் தான்கண்ட உண்மைக்காகச் சற்றுந் தயங்காது துறக்க முன்னிற்பான். பொறுமையென்பது அவனிடத்தே இன்றியமையாம லிருக்கவேண்டுவ தொன்று. அஃதில்லையேல் தனக்கு நேரும் ஊறுகளுக்கு அவன் எங்ஙனம் ஈடுகொடுக்கக் கூடும்? மேலும் பொறுமை யில்லையேல் கருணையில்லை யன்றோ? ஆகவே இக்குணங்களெல்லாம் நிரம்பப் பெற்றவனே வீரனாவன்.

இராமாயணக் காதை தெரியாதவர்கள் ஒருவரு மில்லை யென்றே கருதுகிறேன். அக்காதைத் தலைவனும் இராமன் பல கலைகளுங் கற்றுத் தேர்ந்ததொரு வீரனன்றோ! அவன் யாவர் மாட்டுந் தோல்வியுற்றானில்லை. ஆனால் வெற்றி காரணமாகவே அவனை வீரனெனப் போற்றுகிறோமோ? இல்லை. அவன் வாய்மை மனத்தூய்மை, கருணை, பொறுமை, மனவலிமை ஆகிய இன்னோரன்ன இனிய குணங்கள் வாய்ந்தவன்.

அரக்கர் தலைவன், இராவணன், முதல்நாள் போரில் தன் படைகளையும், படைக்கலங்களையும், பத்து முடிகளையுமிழந்து வெறுங்கையோடு தலைகுனிந்து நின்றான். அதுபோழ்து இராமன் ஒரே அம்பினால் அவனைக் கொன்று வீழ்த்தியிருக்கலாம். ஆனால், அவ்வாறு செய்யாமல்,

"நின்றவர்நிலை நோக்கிய நெடுந்தகை யிவனைக்
கொன்ற லுன்னிலன் வெறுங்கை நின்றானென"

என்ற கம்பர் கூற்றால் ஓர் படையுமின்றி வெறுங்கையோடு நிற்கின்றானிவன். இச்சமயத்தில் நாம் இவனைக் கொல்வோமாயின், அஃது ஆண்மையாகாது; வீரமாகாது, என வுணர்ந்து "என் வல்லமையை யறிந்த இப்போதாயினும் என் மனையாளை என்னிடம் விடுத்து நின் உறவினரோடும், நின் பொருள்களோடும் வீபீடணனுடனிருந்து வாழ்வாய்; இல்லையேல், இன்று போய்ப் போருக்கு நாளைவா;" என அருளுரை பகர்ந்தான்.

இத்தகைய வீரனும், ஒருகால் வீரத் தன்மையினின்று மிழுக்கினான். அதாவது சுக்கிரீவனுக்கு அரசளிக்கும் பொருட்டு வாலியுடன் போர்புரியச் சென்றான். அதுபோழ்து மெய் வீரன்போல் நேர்நின்று அமர் புரியாது ஓர் மறைவிடத்தே ஒளிந்து வாலிபால் அம்பு எய்தான். தான் செய்வது தகாததென வுணர்ந்தே அவன் அங்ஙனம் அம்பெய்தான். அவன் எவ்வாறு அம்பு விடுத்தானென்பதைக் கம்பர் மிக அழகுபடக் கூறியுள்ளார்.

"எடுத்துப் பாரிடை யெற்றுவாம் பற்றியென்றிளவல்
கடித்தலத்தினுங் கழுத்தினுந் தன்னிரு கரங்கள்
மடுத்து மீக்கொண்ட வாலிமேற் கோலொன்று வாங்கித்
தொடுத்து நாணொடு தோளிலுய்த்தி ராகவன் றுரந்தான்"

வீரனுக்குத் தகாததோர் செய்கை தாமியற்றியதால், இராமன் நாணத்தோடு துரந்தான் எனப் பொருள்படக் கிடப்பது கருதற்பாற்று.

வாலியும் இராமன் தன் அறந்தவறிய செய்கையுணர்ந்து அவன்பால் கடுமொழி பகர்வது ஆராயற்பாலது.

"வீரமன்று, விதியன்று மெய்மையின்
வாரமன்று நின்மண்ணினுக் கென்னுடல்
பாரமன்று பகையன்று பண்பொழிந்
தீரமன் றிதுவென் செய்தவாறு நீ"

என வாலி இரக்கங்கூர மொழிந்தான். மேலும் அவன் "நின் செய்கை, நினது மாசற்ற குலத்திற்கே கேடு சூழ்வித்ததே. இது தானோ நின் ஆண்மை, இதுவோ நின் வீரம்" என இடித்திடித் துரைத்தான்.

இது நிற்க, இராவணன் தம்பியாகிய கும்பகர்ணனும் ஒரு பெரும் வீரனே. தன் அண்ணன் அநியாயப்போர் புரிகின்றா

னென அறிந்தும், தான் மடிவது திண்ணமெனத் தெரிந்தும், இராமன் தன் பக்கல் வந்து சேரும்படி கருணையோடு தூது விட்டனுப்பியும், அவன் "என் அண்ணன் என்னை இத்துணை நாள் வளர்த்து இப்போது போர்க்கோலஞ்செய்து 'போர் புரிந்துவா' என்று அனுப்பியிருக்க இந்த நீர்க்கோல வாழ்வை விரும்பி இராமனைச் சேர்வேனோ? யான் உயிர்துறப்பது திண்ணமேனும் அஃது எனக்குப் புகழேயாம்" என்றான். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற உண்மையை உணர்ந்தவனாதலால் தான் கண்ட உண்மை நெறியை உயிரினும் ஓம்பினான். இஃ தன்றோ வீரம்!! (தொடரும்)

---

# எச். ஜி. வெல்ஸ்

நேற்றுமாலை பாடிங்டன் நோயாளர் விடுதியிற் றம்முடைய 97-ஆம் அகவையில் திடுமென மாரடைப்பினால் உயிர்நீத்த திரு. எச். ஜி. வெல்ஸ் என்னும் பெரியாரைப்பற்றி இக்கால இளைஞர்கள் அதிகமாக அறிந்திருத்தல் அரிது. ஆனால், இந்நூற்றாண்டின் றொடக்கத்தில் வெளிவந்த பலவாய நூல்களையும் விரும்பிப் படித்துள்ள முதியோரிற் பலர் அப் பெரியார் எழுதிய பல நூற்களின் பெயர்களை நினைவுகூர் தற் கூடும்; என்? அந்நூல்களில் இரண்டொன்று அவர்கள்தம் வீட்டுப் பரண்களின் மூலை முடுக்குகளிற் கிடக்கக் காணவுங் கூடும். அக்காலத்தில் கணக்கற்ற நூல்களை யெழுதிக் குவித்த வயிற்றுப் பிழைப்பு நூலாசிரியர்களில் அப்பெரியாரும் ஒருவர். நூலாசிரியராகத் தாமே பல நூல்களை அவர் எழுதியது மட்டுமன்று; அவரைப் பற்றியே பல சிறுநூல்களும், ஆராய்ச்சி யுரைகளும் எழுதப்பட்டிருந்தன. இலண்டன் பிரிட்டிஷ் மியூசியம் என்ற பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலைப் படிப்பறையின் நூலகராதி யட்டவணையில் அவர் பெயரினடியிற் குறிக்கப்பட்டிருந்த நூற்பெயர்கள் அறுநூற்றுக்குக் குறையா.

ஐந்தாண்டுகளுக்குமுன் இலண்டன்மாநகரப் பரப்புரை நிலைய(Broadcasting Station)த்திலிருந்து கன்னி பெல்ப்ஸ் லெமன் (Miss. Phelps Lemon) என்பார் இப்பெரியாரைப்பற்றிய பரப்புரை (Broadcast) யொன்று நிகழ்த்தியுள்ளார். அவ்வுரையில் அவர் எடுத்துக்கூறிய ஒவ்

வொன்றும் இன்றளவும் தட்டியுரைக்கவொண்ணாத உண்மையாகவே இருந்துவருகிறது. "வெல்ஸ் ஒருவகையில் அழிகுறி தெரிப்போரும் மற்றொருவகையில் ஆன்றநல் வழிகாட்டியுமாவர்" என்று அவ்வம்மையார் குறித்துள்ளார்.

1934-ஆம் ஆண்டில் தம்முடைய வரலாற்றை ஒளிமறைவில்லாமல் உள்ளதுள்ளவாறே வெல்ஸ் ஒரு நூலாக எழுதி வெளியிட்டுள்ளார். அந்நூலின் பின்னிணைப்பாக மற்றொரு பகுதியை அவர் பின்னர் எழுதினாரேனும் அதனை அச்சியற்றாது கையெழுத்து வடிவிலேயே பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலைக் கையேட்டு நிலையத்திற் சேமித்து வைத்துள்ளார். இவற்றிலிருந்து அவர் எளிய வாழ்க்கை நடாத்தும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவரென்றும் ஒருசிறிது நிலபுலமுடையவரென்றுந் தெரியவருகின்றன. அவர் 1866-ஆம் ஆண்டிற் பிறந்தார். அவர் தந்தையார் ஒரு சிறு தோட்டக்காரராக விருந்து பின் சிறு வணிகராக மாறி அதன்பின் கூலிக்கு ஆடும் கிரிக்கெட் விளையாட்டுக்காரராக விருந்தவர்; தாயாரோ சோற்று விடுதிக்காரர் ஒருவரின் மகளார்; மணமாவதற்குமுன் வண்ணமகளாகவும் சமையற்காரியாகவு மிருந்தவர். இத்தகைய பெற்றோருக்குப் பிள்ளையாகப் பிறந்த வெல்ஸ் தனிப்பட்ட ஓரியல்பு படைத்தவராக விருந்தார். உலகவாழ்வில் தம் குடும்பத்தினர்க்குக் கற்பிக்கப்பட்டிருந்த தாழ்வை யொத்துக் கொள்ளாதவராய், எட்டியுஞ் சுட்டியுங் கூறப்படாத ஒருயர்ந்த குடும்பத்தின் வழிவந்தவராகவே தம்மை அவர் கூறி நடந்துகொண்டார். பின்வருபவற்றை முன்னோக்கி யுணர்ந்துரைக்கும் நுண்மாண் நுழைபுலம் உடையவராக வெல்ஸ் விளங்கினார். எனினும், கருதுவதிலும், ஆராய்வதிலும், சொல்லாடுவதிலும், எடுத்துரைப்பதிலும் எத்தகைய கட்டுப்பாட்டிற்கு முட்படாத பெருநோக்குடையவராக அவரிருந்தார். தனியுரிமை, வகுப்புரிமை, நாட்டுரிமை என்ற பல உரிமைகளிலும் ஏகபோக வுரிமை விழைவதை அவர் வன்மையாகக் கண்டித்துவந்தார். ரோஜர் பேக்கன் என்ற அறிஞரோடு தம்மை ஒப்பிட்டுக்கொள்வதில் அவருக்குப் பெருவிருப்பம். "வரலாற்று அளவைக் குறிப்பு" (Outline of History), "தொழில், பொருள், உலகவின்பம்" (Work, Wealth and Happiness of Mankind), "தோல்வி நுணுக்கம்" (Anatomy of Frustration) முதலிய பலநூல்களை அவர் இயற்றினார். இக்காலக் கல்விமுறைக்கு அவை ஏற்றன வன்றாயினும், அவை யெழுந்த காலநிலையை நோக்கின் துணிவுடைய சிறந்த ஆராய்ச்சிகளாகவே அவை கருதப்படுதற்

குரியனவாம். அன்றாடச் செய்திகளைத் திறல்பட எழுதுவதிலும், புதுக்கதைகள் எழுதிப் பெருக்குவதிலும் அவர் வல்லவர். அறிவியலுண்மைகள் பொதுள அவர் அக்காலத்திலேயே பற்பல புனைகதைகளை எழுதியுள்ளார். கால்ஸ்வொர்த்தி (Galsworthy), பென்னெட் (Bennet) என்ற அறிஞர்களின் புனைவுகளை யொத்து மறுக்கப்படாத அறிவியலுண்மைகள் திகழ்வனவாக அந்நூல்களிருந்தன வென்று கூறல் முடியாது. அன்றி, மாகாம் (Maugham) என்பாரின் நூலை யொத்து உண்மைகளைப் பிட்டுப் பிட்டு விளக்கும் பொன்றாப் புகழ்பெறக் கூடியனவாயுமில்லை வாழ்க்கையின் பெருமாறுதல்கள், அடுபற்றுகள், கட்சிப்பாகுபாடுகள், நாட்டுச் சழக்குகள் முதலியவற்றை வெல்ஸ் விரும்புவதில்லை. அவர் யாவற்றையும் ஆராய்ச்சி யென்னும் நெய்யரிகொண்டு வடிகட்டும் அறிவமைதி வாய்ந்தவர். பற்றுள்ளத்தைப்பற்றி எழுத நேரின் அவர் உண்மையுணர்ச்சி யின்றியே எழுதுவார். அறிவொழுக்க முறைகளிற் பகட்டித்திரியும் இழுக்கர்களைக் கண்டிக்க நேரிட்டாலோ கழிபெருங் கடுமையுடன் கண்டித்தெழுதுவார். நகைச்சுவை பயக்கும் நொடிநூல்களை யெழுதும் ஆற்றல் வாய்ந்தவர்களி லொருவராக அவரைக் கருதலொல்லுமோ என்றுகூட ஓர் ஐயம் எழுந்ததுண்டு. எனினும், அதைக்குறித்து ஈண்டு விரிக்க வேண்டுவதில்லை. படக்காட்சிக்காக எடுக்கப்படும் படங்களிற் சில நுண்ணிய கருத்துக்களை நுழைக்க அவர் தொடக்கத்தில் முயன்றதுமுண்டு. ஆயினும் படப் பிடிப்புக்குந் தமக்கும் நெடுநதொலை யென்று பின்னர் அவர் கண்டுகொண்டு அம்முயற்சியை விட்டுவிட்டார். படம்பிடிக்கும் அறிஞரே வெல்ஸ் கூறுங் கருத்தின் திறனையுணர்ந்து நடிக்கச்செய்து அவற்றைப் படத்திற் பிடித்துவிட்டாலும், வெட்டறையில் (Cutting Room) அப்பகுதிகள் தவறுமல் வெட்டி யொதுக்கப்பட்டு வந்தன. அக்கருத்துக்களினால் விளையக்கூடிய பயன் இன்னதென்று வெல்சுக்குத் தெரிந்ததைவிடப் படமெடுப்போர் நன்கறிவார் போலும்!!!

"ஒருநாளும் இல்லாத திருநாள்" என்றபடி 1938-ஆம் ஆண்டில் இப்பெரியார் பாஸிஸ்ட் (Fascist) கட்சியைச் சேர்ந்த ஒரு முருடனுடன் சச்சரவிட்டதில் படுகாயமுற்றார். 1942-ல் "சமதர்ம வாதிகள்" என்ற "கம்யூனிஸ்ட்" கூட்டத்தாரின் ஆட்சியிற் சிக்கியதால் எஞ்சியிருந்த உடல்நலத்திலும் பெரும் பகுதியை யிழந்தார். முன்னுணரும் ஆற்றல்கொண்டு உணர்ந்து அவர் எழுதியிருந்ததுபோலவே சென்ற பத்தாண்டுகளுக்குள் வாழ்வுத்துறையிலும் கலைத்துறையிலும் உண்டான புத்துயிர்ப்பியக்கத்தில் அவருக்குப் பங்கேதும் இருந்த

தாகத் தெரியவில்லை. முன்பெல்லாம் அவர் "பிஞ்சிற் பழுத்த பெரியா" ராகக் கருதப்பட்டு வந்ததெல்லாம் போய் இக்காலை அவரை நினைவுகூர்வதற்கும் ஆளில்லையென்றே கூறலாம். 1955-ஆம் ஆண்டில் அரசியலாரால் அளிக்கப்பட்ட ஒரு சிறு ஆண்டிறுக்கை (Civil list Pension)த் தொகையைக் கொண்டு அவர் தம் காலத்தைக் கழித்து வருவாராயினர். ரீஜெண்ட் நந்தவனத்தைச் சேர்ந்த பழைய வீடொன்றில் அவர் குடியிருந்துவந்தார்; பழுத்து, நரைத்துக், கூனிக் குறுகியுள்ள அவர் அந்த நந்தவனத்திடையுள்ள ஏரியிற் செல்லும் படகுகளையோ அன்றி மரங்களிடை மலர்ந்திருக்கும் பூக்களையோ பார்த்து மகிழ்ந்தவண்ணம் உட்கார்ந்திருக்கவோ, அன்றிக் கையிற்பற்றிய தடியை யூன்றித் தட்டுத்தடுமாறிய வண்ணம் இருமிக்கொண்டும் தம்முட்டாமே பேசிக்கொண்டும் செல்லவோ அடிக்கடி பலர் கண்டிருக்கலாம். "எப்படியும் ஓர் "உண்மை" நூலை ஒருநாள் எழுதத்தான் போகிறேன்" என்று அவர் கூறிக்கொள்வார்.

குன்றுகட்டும் பவளச்சிலந்தி என்று அவரைக் கன்னி பெல்ப்ஸ் லெமன் ஒப்பிட்டுக் கூறியது ஒப்புக்கொள்ளக் கூடியதே. அவர் தேர்ந்த ஓவியர் என்று கூறலொண்ணாது; ஆனாற் சிறந்த கலைவல்லார். அவரைப்பற்றியவற்றுள் ஏதொன்றும் நினைவுக்குறியாக அமைந்திருக்கிறது என்று எடுத்துக் காட்டுவதற்கில்லை. எனினும், அவரும் அவரை யொத்த பிறரும் இருந்திலரேல் இக்காலை "நாகரிகம்" என்ற ஒன்று தங்கியுறையும் "பொதுக்கருத்துக்கள்" என்ற குன்று உரம்பெற்றுத் திகழ்ந்திராது.

[மாபெருமறிஞர் எச். ஜி. வெல்ஸ் இன்றும் உயிரோடும் உடல் நலத்தோடு மிருந்துவருகிறார். தாம் தம்முடைய 97-ம் அகவையில், அதாவது கி. பி. 1963-ல் இறந்து போனதாக வைத்துக்கொண்டு அவ்வாறிறந்தபோது தம்மைப்பற்றிப் பிறர் எவ்வாறான இறப்புக் குறிப்புக்கள் எழுதவேண்டுமென்பதைத் தாமே இவ்வாறெழுதி "தி லிஸெனர்" என்ற தாளில் வெளியிட்டுள்ளார். அதன் மொழி பெயர்ப்பே இஃதாகும்.]

காழி.சிவ. கண்ணுசாமி

---

குறிப்பு: இப்பரலில் சேர்க்கப்பெற்றிருக்கும் சர் ரிச்சார்டு ஆர்க்ரைட் என்ற பேரறிஞரின் வரலாறு அடுத்த பரலில் வெளிவரும்.

## மதிப்புரை

தி ஜார்னல் ஆஃப் தி மெஃட்ருஸ் யூனிவர்ஸிட்டி (இண்டியன் லாங்வேஜெஸ் நம்பர்):—இந்த வெளியீட்டின் ஏப்ரல் திங்கள் இதழ் எம்பார்வைக்கு வந்துளது. இத்தகைய ஒரு வெளியீடு மூன்று திங்கட் கொருமுறை வெளிவரும் எனக் கண்டு அகமகிழ்கிறோம். இவ்விதழில் மகாமகோபாத்யாயர் எஸ். குப்புசாமி ஐயர் அவர்களால் ஒரு சமஸ்கிருதக் கட்டுரையும், திருமதி டி. என். தாணு அம்மாளால் "பிற்காலச் சோழர் காலத்துத் தமிழ் இலக்கியம்" என்ற தமிழாராய்ச்சி யுரையும், "மலையாளத்து ஸிரியன் கிறித்துவ வகுப்பினரின் மண முறைகளும் பாட்டுகளும்" என்று திரு. பி. ஜே. தாமஸ் என்பவரால் எழுதப்பட்ட மலையாளக் கட்டுரையும், "தென்னிந்திய முகம்மதியப் புலவர் வரலாறு" என்று திரு. முகம்மது முனவார் காகர் என்பவரால் எழுதப்பட்ட உருதுக் கட்டுரையும் வெளிவந்துள்ளன. சென்னைப் பல்கலைக் கழகத்தாரின் இச்சீரிய தொண்டு பெரிதும் பாராட்டற்குறித்தாம். இவ் வெளியீட்டின் ஆண்டுக் கட்டணம் ரூ. 6

சூரிய வழிபாடும் கோளறு பதிகமும்:—இச்சிறு செய்யுட் பதிகம் யாழ்ப்பாணத்து நவாலியூர்க் க. சோமசுந்தரப் புலவர் அவர்கள் பாடியதாகும். சூரிய வணக்கத்தின் பெருமை தெரிப்பான்வேண்டி இந்நூல் பதிப்பாசிரியர் திரு. க. வேலுப் பிள்ளை அவர்களின் வேண்டுகோட்கிணங்கப் பாடப்பட்டு இரத்தினபுரி திரு. அ. தில்லையம்பலம் பிள்ளை அவர்களின் பொருளுதவியால் அச்சியற்றப்பட்டது. மந்திரத் தமிழ்ச் செறிவுடையதாக இப்பதிகம் விளங்குகின்றது.

இதன் விலை சதம் 10.

கிடைக்குமிடம் க. வேலுப்பிள்ளை, பேராதனை, இலங்கை.

நாணய மாற்று:—மதுரை அமெரிக்கன் கலாசாலைப் பேராசிரியர் ஜே. எஸ். பொன்னையா எம். ஏ., அவர்கள் இயற்றிய இத்தமிழ் நூலின் விலை ரூ. 1. பெருஞ்சிக்கலான இத்துறையில் முதன் முதல் வெளிவந்த தமிழ்நூல் இதுவென்றே கூறலாம். நாணய மாற்று முறையில் உள்ள பலவாய துறைகளும் இதன்கண் நன்கு விளக்கப்பட்டுள்ளன. தமிழர் ஒவ்வொருவரும் இதனைப் படித்தறிதல் இன்றியமையாததாகும். இத்தகைய நூல்கள் இன்னும் எத்தனை வெளிவந்தபோதிலும் நலமே. நம்மிடம் கிடைக்கும்.

மங்கையர்க் கரசியார்:—தெல்லிப்பழை திருமதி அருந்தவ நாயகி கனகராயர் எழுதியது. தமிழ் மணமுஞ் சிவமணமும் ஒருங்கே திகழும் ஆராய்ச்சித் தமிழ் வெளியீடு. தமிழ்ப் பெண்மணிகள் தமிழிற் கட்டுரை யெழுதல் அழகுக்கழகு செய்வதொக்கும் என்பதற் கெடுத்துக்காட்டா யிலகும் இவ் வுயர்ந்த கட்டுரை.

புலியூர்ப் புராணம்:—தெல்லிப்பழை வித்துவான் சிவானந்தைய ரவர்கள் இயற்றியது. அவர் மனைவியார் பவள நாயகி அம்மையார் விரும்பிய வண்ணம் ஏழாலை ஐ. பொன்னையபிள்ளை அவர்களால் இஃது அச்சியற்றப்பெற்றது. புலியூர் என்னும் சிதம்பரத்தைப்பற்றி எத்துணைச் செய்யுணூல்கள் வெளிவந்தாலும் அவை உவந்தேற்றுக் கொள்ளற்குரியனவாம் என்பதே சைவர்தந் துணிபாகும். செய்யுணலந்துறுமும் இச் சீரிய நூலைப் படித்துத் தமிழர் இன்புறுவார்களென நம்புகிறோம்.

---

## தமிழ்க்கலைச் சொல்லாக்க மாநாடு

இம் மாநாடு நிகழும் தாது ஆண்டு புரட்டாசித் திங்கள் 5-ம் நாள் (20-9-'36) ஞாயிற்றுக்கிழமை மாலை நான்குமணிக்கு, சென்னை, பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் கூடும். அதனை உயர்திரு. சர். C. P. இராமசாமி ஐயர் Kt., K. C. I. E., அவர்கள் திறந்து வைப்பார்கள். உயர்திரு. சுவாமி விபுலாநந்தர் B. Sc., (Lond.) அவர்கள் தலைமை தாங்குவார்கள்.

## சென்னை மாகாணத் தமிழர் மூன்றாவது மாநாடு

இம்மாநாடும், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் இரண்டாவது ஆண்டுவிழாவும் நிகழும் தாது ஆண்டு புரட்டாசித்திங்கள் 12-ம் நாள் (27-9-'36) ஞாயிற்றுக்கிழமை மாலை நான்கு மணிக்கு, சென்னை, பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் நடைபெறும். உயர் திரு. திவான்பகதூர் K. தெய்வசிகாமணி முதலியார் அவர்கள் (Retired Joint Registrar of Co-operative Societies) தலைமை தாங்குவார்கள்.

## வேண்டுகோள்

இச்சீரிய முயற்சிகளுக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் அமைச்சர், தமிழ்க்கலைச் சொல்லாக்க மாநாடு, 6, பவழக்காரத் தெரு, சென்னை என்ற முகவரிக்கு அனுப்பிவைப்பார்களாக,

## போ - கெடு, அழிவுறு

வினைச்சொல் - ஏவல்

[ப்+உகு=புகு—போ அல்லது ப்+ஓ=போ] மேற்பொதிந்து நிற்கும் சீரை அல்லது நலத்தைச் சிந்து எனவும், மேற்பொதிந்து நிற்கும் சீரை அல்லது நலத்தை ஒழி எனவும் பொருந்தலால், போ=கெட்டுப்போ, சீர்கெடு, அழிவுறு என்னலாயிற்று.

## போ - உட்படு, ஒப்பு

வினைச்சொல் - ஏவல்

[ப்+உகு=புகு=போ அல்லது ப்+ஓ=போ] மேற்பொதிவாகிய பொதுநோக்கை உகுத்து உட்பட்டு நில் அல்லது பொதுநோக்கை ஒழித்துத் தனதாகக் கொள் என அமைதலின், போ=உட்படு, ஒப்பு எனல் ஆயிற்று.

போ—அசைநிலை இடைச்சொல்லாக, 'பிரியின் வாழாதென்போ' என்னுமிடத்துப் பிரிந்தால் வாழாதென்ன நீ விலகிப் போகலாம் என்னும் குறிநிலை கொண்டமை காண்க.

## மோ - மணம் பிடி, நாற்றமறி

வினைச்சொல் - ஏவல்

[ம்+உக=முக, மோ] பூ, பன்னீர் முதலிய மணமுடைப் பொருள்களின் நாற்றத்தை—உண்மூச்சு வெளிமூச்சின் வழி மேலிழுத் துகந்துகொள்—என ஆகலின், மோ=மணம்பிடி அல்லது நாற்றமறி என்று வழங்குகின்றது.

## மோ - முகந்து அள

வினைச்சொல் - ஏவல்

[ம்+உக=முக=மோ] நெல்,எள்,கொள்,அரிசி, பருப்பு, முதிரை, உளுந்து முதலியவைகளை, படி, மரக்கால் முதலிய முகத்தலளவைகளுள் ஒன்றால், அப்பொருள் உண்ணிலையாகி வெளிப்பட முகந்து எடு என அமைதலின், மோ=முகந்து அள என்னலாயிற்று.

## மோ - மோள்

வினைச்சொல் - ஏவல்

[ம் + உக = முக = மோ] நெகிழ்ந்தொழுகும் நீர்மையப் பொருளை ஓர் கொள்கலத்தின் உண்ணிலையாக்கிக் கொள் என ஆகலின் மோ = மொள் எனலாயிற்று.

மோ—முன்னிலையசை யிடைச்சொல்லாக—கேண்மோ, சென்மோ வென வழங்கல்—'ஏவுந்தொழிலின் தன்மையதை உண்ணிலையாகக் கொண்டு நட' என்னுங் குறிநிலை கொள்ளல் காண்க.

## ஔ - அங்கலாய்த்து விழு

வினைச்சொல் - ஏவல்

[அ + உ + உ = அவ்வு] அதை அங்கு, இங்கு என்றதை வேறோர் நிலைப்பொருளா யுட்படுத்திக்கொள்ள விரைதலே அங்கலாய்த்து வீழ்தலாதலின், ஔ = அங்கலாய்த்து விழு என்று ஆயிற்று.

## ஔ - அவாவி விழு

வினைச்சொல் - ஏவல்

[அ + உ + உ = அவ்வு] தான் தூரத்துக் கண்டபொருளை அதற்கு இதற்கு என்றது தனக்கே இச்சித்து உட்படுத்திக் கொள்ள முயல்வதே அவா வீழ்தலாதலின், ஔ = அவ்வு = அவாவி விழு, என்னலாயிற்று.

## ஔ - அழுந்தி விழு

வினைச்சொல் - ஏவல்

[அ + உ + உ = அவ்வு] ஒரு பொருளைத் தனக்கு வேண்டுமென்ற அதே எண்ணம் தன்னுட்கொண்டுழைத்தலே அழுந்தி வீழ்தலாதலின் ஔ = அவ்வு = அழுந்தி விழு என்னலாயிற்று.

## ஔ - கடித்தல்

தொழிற்பெயர்

[அ + உ + உ = அவ்வு] அப்பொருளே தன்னுட்சொள் பொருளென்று, வாயாற் பற்றுதலே கடித்தலாதலின், ஔ = கடித்தல் எனலாயிற்று.

## ஔ - பூமி, நிலம்

பெயர்ச்சொல்

[அ + உ + உ = அவ்வு] அங்கங்கு காணப்படும் பொருள்களாகிய அவைகள் யாவும் தன்னுட்பொருள்களென அணைத்து நிற்பதே மண்ணுலகமாதலின் ஔ = பூமி என்னலாயிற்று.

## ஔ - முடிவின்மை (அனந்தம்)

பெயர்ச்சொல்

[அ + உ + உ = அவ்வு—ஔ] சேய்மைச் சுட்டாகிய அது வென்பதே மற்றதன் தலைப்பு என்னுங்கால், நிகழத்தக்க பண்பு 'முடிவின்மை' ஆகிய அனந்தம் என்பதே யாதலின், ஔ = அனந்தம் எனலாயிற்று.

ஔ என்பது வியப்பு, அழைப்பு, தடை என்னும் குறிப்பின் இடைச்சொல்லாகுங்கால் அவ்வக் குறிநிலைகளே கொண்டு நிற்கும் என்க. (அரும் வழக்கு)

## கௌ - கடித்துப்பிடி

வினைச்சொல் - ஏவல்

[க் + அ + உ + உ = கவ்வு, கௌ] க்—தொடப்படக்கூடிய விதத்தில், அ—அத்தன்மையான உணவாக உட்கொள்ளத் தக்கதோர் பொருளை, உ—உட்கொள்ள வாயாற் பற்று என அமைதலின், கௌ = (உணவுப்பொருள் ஒன்றைக்) கடித்துப் பிடி என்னலாயிற்று.

## கௌ - கவர்

வினைச்சொல் - ஏவல்

[க் + ஔ = கௌ] தொடப்படக்கூடிய விதத்துள்ள ஒரு பொருளை, ஔ—அவாவிக் கைப்பற்று என அமைதலால், கௌ = கவர் எனல் ஆயிற்று.

## கௌ - வாயினாற் பற்று

வினைச்சொல் - ஏவல்

[க் + ஔ = கௌ] தொடப்படக்கூடிய விதத்தில், ஔ = வாயினாற் கொள் என ஆதலின், கௌ = வாயினாற் பற்று என அமைந்தது.

## கௌ - (கிருத்தியம்) செய்கை

*தொழிற்பெயர்*

[க் + ஔ + ஐ = கௌவை, கௌ] தொடப்படத்தக்க விதத்து, மனம், மொழி, மெய் பொருந்த நிகழ்வது தொழிலே யாதலின், கௌ = கிருத்தியம், செய்கை, தொழில் எனல் ஆயிற்று.

## கௌ - பெருமை

*பெயர்ச்சொல்*

[க் + ஔ = கௌ] புலப்படக்கூடிய விதத்தில் ஒன்றைக் கௌவி (தன்னுள்ளாகக் கொண்டு) நிற்பது பெருமையென அமைதலின், கௌ = பெருமை எனலாயிற்று.

## கௌ - தீங்கு

*பெயர்ச்சொல்*

[க் + ஔ = கௌ] புலப்படக்கூடிய விதத்தில் மனம், மொழி, மெய் வேறொன்றினும் புகவிடாது தன்னுள் அமையக் கௌவி நிற்பது தீங்கேயாதலின், கௌ = தீங்கு எனலாயிற்று.

## கௌ - கோள்

*பெயர்ச்சொல்*

[க் + ஔ = கௌ] தொடப்படத்தக்க விதத்தில் முகத்தலளவைக் கருவியாகிய படி, மரக்கால் கௌவினின் றளக்கப்பெறும் ஓர்வகைத் தானியமாயிருத்தலின், கௌ = கொள் எனலாயிற்று.

## கௌ - (மனஸ்தாபம்) துன்பம், வருத்தம்

*பெயர்ச்சொல்*

[க் + ஔ = கௌ] தொடப்படக்கூடிய விதத்தில் மன மொழி மெய் வேறொன்றுக்கும் திரும்பவிடாது கௌவிப் பற்றிக்கொண்டு நலிவது துன்பமே யாதலின், கௌ = துன்பம், வருத்தம் எனலாயிற்று.

## சௌ - சவ்வென்னும் வெண்தோல்

*பெயர்ச்சொல்*

[ச் + அ + உ + உ = சவ்வு = சௌ] உள்ளீரமாகிய செந்நீர் தசை முதலியவற்றை உறுதியாகப் பற்றிப் பிடித்து ஒளவிக் கொண்டிருப்பது சவ்வென்னும் வெண்ணிறத்தோலே யாதலின், சௌ = சவ்வென்னும் தோல் எனலாயிற்று.

## சௌ - சவ்வரிசி

*பெயர்ச்சொல்*

[ச் + அ + உ + உ = சவ்வு = சௌ]—(இய = ய = ச) அரிசிக்குரிய உண்ணயம், குளிர்ச்சி முதலியவை தன்னில் அடுக்கடுக்காய் ஒளவி (அழுந்தி) நிற்கக் கொள்ளும் இயவகம் என்னும் வகையினதாதலால், சௌ = சவ்வரிசி எனலாயிற்று.

## தௌ - சிதை, கெடு

*வினைச்சொல் - ஏவல்*

[த் + ஔ (அ + உ) = தவ்வு = தௌ] கட்புலனுக்கெட்டும் தோற்றம் தன்னுள் அழுந்தி வீழ்தலே சிதைத்தலாதலின், தௌ = சிதை எனலாயிற்று. (கெடு எனலுமாம்)—(தவ்வு எனவே வழங்கலின் வழக்கொழிந்த சொல்).

## தௌ - குந்தி நட, குந்திப் பாய்

*வினைச்சொல் - ஏவல்*

[த் + அ + உ + உ = தவ்வு = தௌ] கட்புலனுக்கெட்டும் தோற்றம் தன்னுள் மறைபட நடைகொண்டு ஒளவுதலே, குந்தி நடத்தலாதலின், தௌ = குந்திநடவென லாயிற்று. (தௌ—வழக்கொழி சொல்).

## தௌ - சிதைவு, பாய்ச்சல்

*வினைமுதல் தொழிற்பெயர்*

[த் + அ + உ + உ = தவ்வு = தௌ] முற்கூறிய அமைதிப்படி, தௌ = சிதைவு, பாய்ச்சல் எனத் தொழிற்பெயர் ஆயிற்று. (தௌ—வழக்கொழி சொல்.)

### தௌ - தொளை

தொழிற் பண்புப் பெயர்

[த் + அ + உ + உ = தவ்வு = தௌ] கட்புலனுக் கெட்டும் ஓர் பொருளின் புறத்துத்தோற்றம் தன்னுள் ஔவ—அழுந்தி வீழச் செய்தலே தொளையிடலாதலின், தௌ = தொளை எனல் ஆயிற்று. (தௌ—வழக்கொழி சொல்)

### நௌ - ஆடு

பெயர்ச்சொல்

[ந் + அ + உ + உ = நவ்வு = நௌ] உயிர்க்குறுதி விளைக் கும்நன்மை யமைந்த உணவு இன்னதுதானென்றும் இன்ன குழையைத்தின்றால் இனிமையாக இருக்குமென்றும்உணர்ந்து கொள்ளும் திறமையின்றி, ஆடுதொடாமூலி, ஆடுதின்னைப் பாலை நாற்றமாகிய நெடியினாலேயே வெறுப்பு விளைக்கும் இவ் விரண்டொன்றல்லாமல் மற்றெவ்வகைத் தழைகளையும் நல்லது கெட்டதென்று கண்டுகொள்ளவோ தள்ளவோ செய்யாது கண்டகண்ட தழைகளை ஒவ்வோர் கடி கடித்துட்கொண்டு வயிறு நிறைக்கும் ஓரலையுயிர்ப்பொருளே ஆடாதலின், நௌ = ஆடு எனலாயிற்று. (நவ்வு என வழங்கும்).

### நௌ - தோணி

பெயர்ச்சொல்

[ந் + அ + உ + உ = நவ்வு = நௌ] நௌ என்பது வட சொல் எனவும், அதற்குத் தோணி அல்லது கப்பல் எனவும் பொருள் கூறுவர். ஆயினும் தமிழ் வழக்கின்படி நீர் நிலை யாகிய நதி கடல் முதலியவற்றிற் போக்குவரவு செய்ய உயிர்க் குறுதியாகிய நம்பிக்கையில், அதுதான் அக்கரை சேர்க்கும் எனப் பற்றிக்கொள்ளத்தக்கதும், தன்னிடத்து அடுக்கும்பொருளை உயிர்க்குறுதியும் இன்பமும் கொள்ளத் தக்க விதத்திற் கேடின்றி நீர்நிலை கடத்தி மறுகரைக்குச் சேர்க்கத்தக்கதுமானதால் தோணி, படகு, ஓடம், கப்பல் முதலிய வெனல் ஆயிற்று. (வ.ஒ)

### நௌ - நன்மை

பெயர்ச்சொல்

[ந் + அ + உ + உ = நவ்வு = நௌ] ஆன்மாவுக்குரிய இன்

பம், உறுதி முதலியவைகள் தன்னில் உள்ளதெனக் காண்பது நலனுதலின், நௌ = நன்மை எனலாயிற்று.

### வௌ - வார்

*வினைச்சொல் - ஏவல்*

[வ் + ஔ = வௌ] ஒன்றிலிருந்தும் வெளிப்படத்தக்க பொருளை அவாவுடன் வீழ்ந்தெடுப்பதே வாருதலாதலால் வௌ = வார் என்றாயிற்று.

### வௌ - கொள்ளையிடு

*வினைச்சொல் - ஏவல்*

[வ் + ஔ = வௌ] ஓரிடத்துச் சேமத்தில் வைக்கப்பட்டிருக்கும் பிறர்பொருளை அவர்கள் அறியாது வாரியெடுத்துப் போதலே கொள்ளையிடுதல் ஆதலின், வௌ = கொள்ளையிடு எனல் ஆயிற்று.

### வௌ - திருடு

*வினைச்சொல் - ஏவல்*

[வ் + ஔ = வௌ] ஒருவரிடத்துள்ள பொருளை அவர் அறியாமலோ, அவரைத் துன்பப்படுத்திப் பயங்காட்டியோ, அப்பொருளுக்குரியவரை வெளிப்படவிடாமல் மடக்கிப் படையோடும் வந்து கவர்வதும், பதுங்கியிருந்து வழிமறித்துப்பிடித்துக் கையிலுள்ள பொருளைப் பறித்துக்கொள்வதும் திருட்டே யாதலின், வௌ = திருடு எனலாயிற்று.

### வௌ - பற்றிப்பிடி

*வினைச்சொல் - ஏவல்*

[வ் + ஔ = வௌ] தான் நெடுநாளாகப் பெறவேண்டுமென்ற விருப்பத்தோடும் எதிர்பார்த்திருந்த ஓர் பொருள் நேரில் அகப்படுங்கால், அப்பொருள் யாருடையதாயினும் அதுதானா தான் இச்சித்திருந்தது என்றேனும் கண்டறிந்து கொள்ளப் பற்றிப்பிடித்துப்பார்த்தல் வழக்காதலின், வௌ = பற்றிப்பிடி என அமைந்தது. நளன் அன்னப்புள்ளை வெளவினதுபோல வென்க.

**நெடில் ஓரெழுத்தொரு மொழிகள்**
**முற்றிற்று**

# குறில் ஓரெழுத்தொரு மொழிகள்

அஃகு=[அ—அது, ஃக்—தொடப்பட நிற்குந் தன்மையில், உ—உள் அடக்கம் கொள்ளும் தொழில்] ஆதலின் 1. ஒடுக்கம் நிறைவு தன்உள் அடங்கக் குறை. 2. பெருக்கம் தன்உள் அடங்கச் சுருங்கு. 3. திண்மை தன்உள் அடங்க நுண்மையாகு. 4. அளவு தன்உள்அடங்கக் குறுகு. 5. பரப்பு தன்உள் அடங்கக் குவி. 6. வீக்கம் தன்உள் ஒடுங்க நீர்வற்று. 7. கூட்ட நிலை தன்உள் ஒடுங்கக் கழிந்துபோ. 8. வலிமை தன் உள் ஒடுங்கக் குன்று.

அஃகம்=[அஃகு 2+அம்=அஃகம், அகம் (உ-ம்-அக விலை அஃகம் சுருக்கேல்) அம்—வினைமுதற் பொருண்மையில் —அ—தான், ம்—உட்கொண்டு ஒப்புநில்]—முளைத்து விளை பெருக்கத்தின் சுருக்கத்தைத் தன் உட்கொண்டு நிற்கும் தானியம்.

அஃகம்=[அஃகு 3+அம்—அங்காந் துட்கொள்ளப் படும் (அ+ம்) நீர்]—பெருக்கச் சுருக்கும் தன்னுள் அடங்க ஊறி, அங்காந் துட்கொள்ளப்படுதலின், ஊறு நீர்.

அஃகரம்=[அஃகு+அரம்] பிணிகுறைத்து நீர்வற்றச் செய்தன்மைக்கு, நுண்ணிய அராவுகருவி போல்வதாதலின், வெள்ளெருக்கு.

அஃகரம்=[அஃகு+அரம்] மலையின் திட்பத்தை நுட்பப்படுத்த நுண்ணிய அராவுகருவி போல்வதாதலின் கிரிகை (ஆள் வினை).

அஃகுல்லி=[அஃகு+உல்லி] அகவிதழ் செறிந்து தன்னுள் பூந்தாது உகுத்து நிற்கும் அல்லியையும், உள்ளிருக்கும் நீரை முன்னிலையில் ஒழுகப்போக்கிப் பாழ்படும் இல்லியையும் போலாது மெல்லிய உதிர்களே மற்றதுவாய் நுண்மைப்பட்டு நிற்றலின் அஃகுல்லி என்னும் உக்காரி.

அஃகுல்லி=[அஃகு+உல்லி] திண்மையுற்ற நுண்மையில், மெல்லிய உதிர்களால் உருக்கொண்ட புல்லடைபோன்ற சிற்றுண்டி.

அஃகுல்லி=[அஃகு+உல்லி=வெங்காயப்பூ] நுண்ணிய உதிர்களாய் ஒடுங்கக் குவிபட்டு வெங்காயப் பூவென்னும் உல்லிபோன்றிருக்கும் பிட்டு.

அஃகுள்=[அஃகு+உள்]=அஃகுள், அக்குள்=தொட்டால் தன் உணர்ச்சி யளவிற் கூச்சத்தாற் குறைபட்டு ஒடுங்கச்செய்யும் உட்புறமாகிய கக்கம்.

Printed by Mr. C. M. Govindarajan, at the The Progressive Printers.
Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Tinnevelly, Ltd.